**குளச்சல் போர் (1740 - 1741)** ♦ *நூலாசிரியர்: மார்க் டி லெனாய் ♦ தமிழில்: திருத்தமிழ்த்தேவனார் ♦ நூல்வகை: வரலாறு ♦ முதல் பதிப்பு: சூன் 2019 ♦ தொடர்புக்கு: திருத்தமிழ்த்தேவனார் எம்.ஏ.,எம்.எல்., வழக்குரைஞர், நாகர்கோவில் – 629 001, அலைபேசி: 83 00 20 71 93. ♦ தட்டச்சு: திருத்தமிழ்த்தேவனார் ♦ பதிப்பகம்: எம். லூர்துமேரி, ஆதாம் ஏவாள் பதிப்பகம், நாகர்கோவில் – 629 001, அலைபேசி: 04652 – 221193. ♦ அட்டைப்படம்: சகாய சுரேசு ♦ நூலாக்கம்: கடிகை ஆன்றனி, 9840590892 ♦ பிரதிகள்: 1000 ♦ பக்கம்: 132 ♦ விலை: ரூ.130*

***நன்றிக்குரியவர்கள்:***

- ☯ *கடிகை ஆன்றனி*
- ☯ *சகாய சுரேசு*
- ☯ *எம்.எல். மேரி*
- ☯ *கு. சந்திரன்*
- ☯ *என்.டி. தினகர்*
- ☯ *ஆர். பிரேம்குமார்*
- ☯ *ஆன்றனி கிளாரட்*

## பதிப்புரை

டி லெனாயை கைது செய்தவர் தேவசகாயம் பிள்ளை, டி லெனாயை கைது செய்தவர் அனந்தபத்மநாபன், டி லெனாயை கைது செய்தவர்கள் மீனவர்கள், டி லெனாயை கைது செய்தவர் குமார உதய மார்த்தாண்டன் நாடார், டி லெனாயை கைது செய்தவர் பொன்பாண்டித் தேவர், டி லெனாயை கைது செய்தவர் மார்த்தாண்ட வர்மா என பல நூல்கள் குமரி மாவட்டத்தில் வெளிவந்து வாசகர்கள் மத்தியில் பெரும் குழப்பங்களை ஏற்படுத்தி இருந்தன. அந்நூல்கள் அனைத்தும் சாதி மற்றும் மத உணர்வாளர்களால் கட்டமைக்கப்பட்டு இருந்தன. பனந்தடிகளை வைத்துதான் திருவிதாங்கூர் படைகள் குளச்சல் போரில் வெற்றி பெற்றதாக ஓர் கட்டுக்கதையும் குமரி மண்ணில் உலாவருகிறது. அப்படிப்பட்ட பொய் கதைகளை உடைத்தெறிந்த நூல்தான் திருத்தமிழ்த் தேவனாரின், ‘குளச்சல் போர் – கட்டுக் கதைகளும் கற்பனைக் குதிரைகளும்’ என்கிற நூலாகும். அந்நூலின் அலைகள் அமைதியாவதற்கு முன்பாக திருத்தமிழ்த் தேவனாரின் மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ள நூல், “குளச்சல் போர் (1740 – 1741)”.

நெதர்லாந்து நாட்டைச் சார்ந்த வரலாற்றாளர் மார்க் டி லெனாய் என்பவர் பிரான்சு, இங்கிலாந்து, நெதர்லாந்து, இந்தியா போன்ற நாடுகளிலுள்ள ஆவணக் காப்பகங்களுக்கு நேரில் சென்று, அங்கிருந்த ஆவணங்களின் அடிப்படையில், ‘THE KULASEKHARA PERUMALS OF TRAVANCORE (History and State Formation in Travancore from 1671 to 1758) என்கிற தனது முனைவர் பட்டம் ஆய்வினை லீடன் பல்கலைக்கழகத்தில் சமர்பித்தார். இந்த ஆய்வு ஏடானது, 1997ஆம் ஆண்டு நூலாக வெளியானது. அந்த ஆய்வேட்டிலுள்ள குளச்சல் போர், இராணுவப் பணியாளர் சந்தை, டச்சுவின் வீழ்ச்சி மற்றும் திருவிதாங்கூர் சேவையில் ஐரோப்பியர்கள் ஆகிய

கட்டுரைகளை திருத்தமிழ்த்தேவனார் தமிழில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார். அத்தோடு, மார்க் டி லெனாய் எழுதிய, “THE TRIALS OF CAPTAIN HACKERT AND ENGINEER ANDRIES LESLORANT AT THE MALABAR COUNCIL OF WAR” என்கிற கட்டுரையையும் தமிழில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார். குளச்சல் போர் நடைபெற்ற காலகட்டத்தில் பதிவான ஆவணங்களின் அடிப்படையில் இந்த கட்டுரைகள் எழுதப்பட்டிருப்பது சிறப்பிற்குரியதாகும். அவைகள், இந்நூலுக்கு பலம் சேர்ப்பவையாக அமைந்துள்ளன.

‘குளச்சல் போர்’ குறித்த தகவல்களை, ஆவண அடிப்படையில் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்களுக்கு இந்நூல் ஓர் வரப்பிரசாதமாக இருக்கும். இந்நூலை, ‘ஆதாம் ஏவாள் பதிப்பகம்’ வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகிறது. இந்நூல் ஏற்கனவே வெளிவந்துள்ள கற்பனைக் கதைகளுக்கு முடிவு கட்டுவது மட்டுமின்றி, உண்மை வரலாற்றை வெளிச்சமிட்டுக் காட்டுகிறது.

**– எம்.எல். மேரி,**
ஆதாம் ஏவாள் பதிப்பகம்.

## மன்னர் மார்த்தாண்ட வர்மா!

*திருவிதாங்கூர் அரச குடும்பப் பெண்களை, 'ஆற்றிங்கல் இளவரசிகள்' என வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுவதுண்டு. இவர்களை, ஆற்றிங்கல் மூத்த தம்புராட்டி (ஆற்றிங்கல் மூத்த இளவரசி), ஆற்றிங்கல் கொச்சு தம்புராட்டி (ஆற்றங்கல் இளைய இளவரசி) எனப் பட்டப் பெயர்கள் கொண்டிருப்பர். ஆற்றிங்கல், திருவனந்தபுரம் நகரிலிருந்து 30 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது. ஆற்றிங்கல், திருவிதாங்கூர் மன்னர்களின் பரம்பரை வீடாகும். ஆற்றிங்கல் ஓர் தனிநாடாக ஒருபோதும் இருந்ததில்லை. இருப்பனும் ஆற்றிங்கல் இளவரசிகளுக்கு தோட்டங்களும், நிர்வாகப் பகுதிகளும் மன்னர்களால் வழங்கப்பட்டு இருந்தன. திருவிதாங்கூர் மன்னர்கள் எல்லோரும் ஆற்றிங்கல் இளவரசிகளின் மகன்களே. இதனால், குடும்பத்தாரும் மக்களும் மிகுந்த மரியாதையுடன் அவர்களை மதித்து வந்தனர்.*

*திருவிதாங்கூரின் மிக முக்கியமான வருமானம் என்பது சுங்க வரி. பொருட்களின் மதிப்பினைப் பொறுத்து 2.5 முதல் 10 சதவீதம் வரை வரி வசூலிக்கப்பட்டது. விலையுயர்ந்த கற்கள், உலோகங்கள், மிளகு, பருத்தித் துணி வகைகள், ஏலக்காய், பலாப்பழம், கருங்காலி மரங்கள், தேக்கு, தேன், மெழுகு, யானை பிடித்தல் மற்றும் கப்பல்களின் வருகை ஆகியவற்றால் வருமானம் கிடைத்து வந்தது. மேலும், 'தலப்பணம்' (அடிமைப் பணம்) வருடத்திற்கு உத்தேசமாக 1 அல்லது 2 பணம் வசூலிக்கப்பட்டது. போர் காலங்களில் 5 கலியான் பணம் (உத்தேசமாக ரூ. 25) வசூலிக்கப்பட்டது.*

*உள்ளூர் நிர்வாகத்தை எட்டுவீட்டுப் பிள்ளைமார்கள் கவனித்து வந்தார்கள். மார்த்தாண்டம், இராமனமடம், குளத்தூர், கழக்குட்டம், வெங்கனூர், செம்பழந்தி, கொடுமான் மற்றும் பள்ளிச்செல் ஆகியப் பெயர்களில் எட்டுவீட்டுப் பிள்ளைமார்கள் அறியப்பட்டனர். தங்களின் அதிகாரத்தைப்*

பயன்படுத்திய பிள்ளைமார்கள், பல குடியிருப்புகளை கைவசப்படுத்தி கொண்டனர். உண்மையான நில உரிமையாளர்களின் சொத்துக்களையும் அபகரித்துக் கொண்டனர். மன்னராட்சியில் பிள்ளைமார்களின் கைகள் ஓங்கி இருந்தன. திருவிதாங்கூர் மன்னர், மதுரை நாயக்கருக்கு கப்பம் கட்டிக் கொண்டிருந்தார். காயங்குளம், தேசிங்கநாடு, நெடுமங்காடு, புறக்காடு, கொச்சி, கோட்டயம், கருநாகப்பள்ளி, தெக்கும்கூர், வடக்கும்கூர், திருவிதாங்கூர் ஆகிய நாடுகள் தொடர்ந்து ஒருவருக்கொருவர் சண்டையிட்டு கொண்டிருந்ததால் நாடுகளுக்கிடையே குழப்பநிலை நீடித்துவந்தது.

அதித்ய வர்மா 1711 முதல் 1721 வரை திருவிதாங்கூரை ஆட்சி செய்தார். ஆதித்ய வர்மாவின் ஆட்சியை ஏற்றுக்கொள்ளாத எட்டுவீட்டுப் பிள்ளைமார்கள் தேசிங்கநாடு மன்னருக்கு ஆதரவு தெரிவித்து வந்தார்கள். அதித்ய வர்மா, சரக்கு வரியை உயர்த்தினார். பழைய நாணயங்களுக்குப் பதிலாக புதிய நாணயங்களை அறிமுகப்படுத்தினார். இதனால், நாட்டின் வரி வசூலை தங்கள் கைவசம் வைத்திருந்த எட்டுவீட்டுப் பிள்ளைமார்கள், மன்னருக்கு எதிராக நாசவேலைகளில் ஈடுபட்டனர். 1721-இல் அதித்ய வர்மா மரணம் அடைந்ததற்குப் பின்பாக, 1721 முதல் 1729 வரை இராம வர்மா திருவிதாங்கூரை ஆட்சி செய்தார்.

25 ஏப்ரல் 1723-இல் தொழிற்சாலை ஒன்றினை குளச்சலில் கட்டுவதற்கு ஆங்கிலேயர்களுக்கு இராம வர்மா அனுமதி வழங்கினார். அவர்களோடு ஓர் ஒப்பந்தத்தையும் உருவாக்கிக் கொண்டார். பிள்ளைமார்கள் மே 1724-இல் ஆங்கிலேயர்களின் குளச்சல் தொழிற்சாலையை அழித்து நாசப்படுத்தி தங்களின் வலிமையை நிருபித்தனர். 1725-இல், ஆங்கிலேயர்கள் மீண்டும் தங்களது நெசவுத் தொழிற்சாலையை புதுப்பித்தனர். விரைவிலே, எட்டுவீட்டுப் பிள்ளைமார்கள் மீண்டும் அதனை நாசப்படுத்தினர். சூலை மாதம், அதற்கான இழப்பீடாக, கடியப்பட்டணத்தில் புதிதாக நிறுவப்பட்ட தன்னுடைய கிளை அரண்மனையை, ஆங்கிலேயர்களுக்கு இராம வர்மா வழங்கினார். பிள்ளைமார்கள், உள்ளூர் வியாபாரிகளுடன் இணைந்துகொண்டு அதற்கு எதிர்ப்பு

தெரிவித்ததால் ஆங்கிலேயர்களுக்கு அங்கே எதுவும் செய்ய முடியாமல் போனது.

1725–இல், திருவிதாங்கூர் மன்னரின் சலுகை வேண்டி பிரெஞ்சுவினர் ஓர் கப்பலை குளச்சலுக்கு அனுப்பி வைத்தனர். 1726–இல், பிரெஞ்சு உடனான பேச்சு வார்த்தையில் உடன்பாடு ஏற்பட்டதன் விளைவாக விழிஞ்ஞும் மற்றும் கடியப்பட்டணத்தில் தொழிற்சாலை கட்டுவதற்கு மன்னர் அனுமதியளித்தார். இதற்கு முன்பாக அதேபகுதிகளில் ஆங்கிலேயர்களுக்கும் மன்னர் தொழிற்சாலை கட்டுவதற்கு அனுமதி அளித்திருந்தார். மே 1727–இல், சரக்குகளுக்கான வரியை மன்னர் உயர்த்தியதால் ஆங்கிலேயர்களின் வர்த்தகம் பாதித்தது. இதனால், ஆங்கிலேயர்கள் பிள்ளைமார்களுடன் இணைந்து கொண்டனர். எட்டுவீட்டுப் பிள்ளைமார்களாகிய நாஞ்சி முட்டன் மற்றும் கொடுமான்பிள்ளை ஆகியோரிடம் ஆங்கிலேயர்கள் ஒப்பந்தம் செய்து கொண்டனர். 25 மார்ச் 1728–இல், காயங்குளம் மற்றும் தேசிங்கநாடு ஆகியவை இராம வர்மாவுக்கு எதிராக எட்டுவீட்டுப் பிள்ளைமார்களுடன் இணைந்து கொண்டனர். இவ்வாறாக, பெரிய குழப்பங்களுக்கு மத்தியில், 9 பிப்ரவரி 1729–இல் பெரியம்மை நோயால் இராமவர்மா மரணம் அடைந்தார். அவருக்கு அடுத்தபடியாக, மன்னராகப் பொறுப்பேற்ற தலச்சேரி இளவரசர் ஒரு மாதத்திற்கு உள்ளாகவே, அதாவது பிப்ருவரி 28–ஆம் தேதி மரணம் அடைந்தார். அவரைத் தொடர்ந்து, மன்னராகப் பொறுப்பேற்ற நெய்யாற்றங்கரை இளவரசர் ஆறு மாத காலமே ஆட்சி செய்தார். அவரும் பெரியம்மை நோயால் 1729 ஆகத்து 30 அன்று திருவட்டாறுவில் வைத்து காலமானார். இந்த நெய்யாற்றங்கரை இளவரசரின் இளைய சகோதரர்தான் மார்த்தாண்ட வர்மா.

1705–இல், ஆதித்யா மற்றும் இராமவர்மாவின் இளைய சகோதரிக்கு மகனாக பிறந்த மார்த்தாண்ட வர்மா கிளிமானூர் இளவரசராக இருந்தவர். ஒரே ஆண்டுக்குள் மூன்று மன்னர்கள் அடுத்தடுத்து இறந்ததால், எதிர்பாராதவிதமாக திருவிதாங்கூர் மன்னராக மார்த்தாண்ட வர்மா பொறுப்பேற்க வேண்டியதாயிற்று. மார்த்தாண்ட வர்மாவை மன்னராக ஏற்றுக்கொள்ள மறுத்த எட்டுவீட்டு பிள்ளைமார்கள், அவரை

கொலைசெய்ய வழிவகைத் தேடினர். பிள்ளைமார்கள் தேசிங்கநாட்டுடன் கூட்டணி வைத்துக் கொண்டனர். அபாயத்தை உணர்ந்த அவர், ஆற்றிங்கல் பகுதிக்கு தப்பிச் சென்றார். திருவிதாங்கூர் நாட்டு கையேட்டுவின்படி (According to Travancore State Manual), கொலை செய்வதற்காக அவரை விரோதிகள் தீவிரமாக தேடிக் கொண்டிருந்ததால், பல இரவுகள் மரக்கிளைமீது குடியிருக்க வேண்டியதாக இருந்தது.

1729–இல் ஆறு மாதகாலம் மன்னராக இருந்த நெய்யாற்றங்கரை இளவரசரின் வைப்பாட்டி அபிராமி என்பவரின் மகன்களான பத்மநாபன் தம்பி (பப்புத் தம்பி) மற்றும் இராமன் தம்பி ஆகியோர் எட்டுவீட்டுப் பிள்ளைமார்களுடன் இணைந்து மார்த்தாண்ட வர்மாவை கொலை செய்வதில் முனைப்பு காட்டினர். பப்புத் தம்பியை மன்னராக்கும் முயற்சிகளில் அவர்கள் ஈடுபட்டனர். திருவிதாங்கூர் அரச குடும்பத்தினர் கடைபிடித்து வந்த மருமக்கள் தாயகத்தின் விதிமுறைப்படி மன்னரின் நேரடி வாரிசுகள் யாரும் மன்னர் ஆகிவிட முடியாது. மன்னரின் உடன்பிறந்த சகோதரி பிள்ளைகள்தான் மன்னராக முடியும்.

திருவிதாங்கூர், ‘மருமக்கள் தாயகம்’ அமைப்பைச் சார்ந்தது. இந்த விநோதமான சட்டமானது, ஆண் தனது மனைவி மற்றும் குழந்தைகள்மீது அன்பு செலுத்துவதைத் தவிர்க்கும்பொருட்டு, ‘சம்பந்தம்’ என்ற பெயரில் உருவாக்கப்பட்டது. குடும்ப கட்டமைப்புகளில் இருந்து அவர்கள் விலகியிருந்தால், அவர்கள் பிறந்ததன் நோக்கமாகிய போர் காரியங்களில் இன்னும் அதிகமாக தங்களை ஈடுபடுத்திக் கொள்ள முடியும். திருமணம் என்பது ஓர் ஆணையும், ஓர் பெண்ணையும் நிரந்தரமான உறவுக்கு அழைத்துச் செல்கிறது. சம்பந்தம், திருமணத்தை முக்கியமாகக் கருதவில்லை. சம்பந்தத்தின்மூலம் தம்புராட்டிக்குப் பிறக்கும் குழந்தைகள், அவருக்கு பின்பாக மன்னர் ஆகிவிட முடியாது. அதேவேளையில் அவர்களுக்கு உதவித் தொகையும், சீவனாம்சமும் வழங்கப்படும். ஆண் குழந்தையானது தம்புரான் என்றும், பெண் குழந்தையானது தம்புராட்டி எனவும் அழைக்கப்படுவர். மன்னரின் சகோதரிகளின் மூத்த ஆண் மகனே அரியணையில் மன்னராகப் பதவி ஏற்க முடியும்.

இந்நிலையில், தம்பிமார்களுக்கு எட்டுவீட்டுப் பிள்ளைமார்களும், யோகக்காரர்களும், மதுரை நாயக்கர்களும் ஆதரவு அளித்தனர். நெய்யாற்றன்கரையில் வைத்து மார்த்தாண்டவர்மா ஒருபுறமாகவும், பிள்ளைமார்களும் தம்பிமார்களும் இன்னொருபுறமாகவும் மோதிக் கொண்டனர். இதில், 60 ஆண்கள் கொல்லப்பட்டனர். இராமன் தம்பியின் காலில் காயம் ஏற்பட்டது. மேலும், இரண்டு காரியக்காரர்களும் காயம் அடைந்தனர். மதுரை ஆட்சியாளரின் திருநெல்வேலி பகுதி பிரதிநிதியான அழகப்ப முதலியார் பொறுப்பு ஏற்றபிறகு, மார்த்தாண்டவர்மா அவருக்கு நம்பிக்கைக்குரிய செயலாளர்களான இராமைய்யன் மற்றும் தளவாய் நாராயண அய்யன் ஆகியோரை அழகப்ப முதலியாரிடம் அனுப்பி வைத்தார். அவர்கள், பெண்கள் வழியாகத்தான் திருவிதாங்கூர் அரச குடும்பத்திற்கு வாரிசுதாரர்கள் வர முடியும் என்கிற விவரத்தை எடுத்துரைத்தனர். அதில், அழகப்ப முதலியார் திருப்தி அடைந்த நிலையில் தம்பிமாரின் கோரிக்கையை நிராகரித்தார். இதனால் வேறுவழியின்றி 1730 அக்டோபர் மாதத்தில் மார்த்தாண்ட வர்மாவுக்கு மரியாதை செலுத்தவும், அவரின் கட்டளைக்கு கட்டுப்படவும் தம்பிமார்களை உடன்பட வைத்தனர் எட்டுவீட்டுப் பிள்ளைமார்கள்.

1730 அக்டோபர் 28 அன்று மாலை 4 மணி அளவில் கல்குளத்தில் வைத்து தம்பிமார்கள் மார்த்தாண்ட வர்மாவை சந்தித்தனர். அங்கு அவர்கள் மார்த்தாண்ட வர்மாவின் ஆதரவாளர்களால் கொலை செய்யப்பட்டனர். தம்பிமார்களின் கொலை சம்பந்தமாக பல கதைகளும், பாடல்களும் புனையப்பட்டன. தம்பிமார்களின் இறப்பு, எட்டுவீட்டுப் பிள்ளைமார்கள் மற்றும் யோகக்காரர்கள் ஆகியோருக்கு கடுமையான எச்சரிக்கையை ஏற்படுத்தியது. உடனடியாக அவர்கள் பிரச்சனை எதுவும் செய்யாமல் அமைதி காத்தாலும், எதிர்மறையான செயல்களில் தொடர்ந்து ஈடுபட்டனர். அவர்கள், மன்னரை கொலை செய்வதற்கு காயங்குளத்தில் உள்ள இரண்டாவது இளவரசரின் உதவியை நாடியிருந்தனர். இதனால், அதிருப்தி அடைந்த மன்னர், அவர்களை கைது செய்யும்படி உத்தரவு பிறப்பித்தார்.

எட்டுவீட்டுப் பிள்ளைமார்கள் கைது செய்யப்பட்ட நிலையில், அவர்கள் உடனடியாக கொல்லப்பட்டனர். பிள்ளைமார் குடும்பத்தைச் சார்ந்த சிலர் கொல்லத்தில் (தேசிங்கநாடு) தஞ்சம் புகுந்தனர். பிள்ளைமார்களுடைய நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. அவர்களுடைய வீடுகள் தரைமட்டம் ஆக்கப்பட்டன. அவர்களுடைய மனைவிகளையும், குழந்தைகளையும் மீனவர்களாகிய முக்குவர்களுக்கு அடிமையாக விற்பனை செய்தனர். இவ்வாறாக திருவிதாங்கூரில் எட்டுவீட்டுப் பிள்ளைமார் குடும்பத்தினர் ஒட்டுமொத்தமாக அழித்தொழிக்கப்பட்டனர்.

மார்த்தாண்டவர்மா ஆட்சிக்கு வந்தபிறகு, உள்ளூர் நிலபிரபுதத்துவ அதிகாரத்தை அழித்தார். நாட்டில் நிலவிவந்த அதிகார குழப்பத்தை நீக்கி, மையப்படுத்தப்பட்ட முடியாட்சியை கொண்டுவந்தார். ஆற்றிங்கல் இளவரசிகள், அதிகாரத்தை கையில் வைத்துக்கொண்டு வெளிநாட்டு வியாபாரிகளோடு தன்னிச்சையாக ஒப்பந்தத்தில் ஈடுபட்டனர். அவர்களால் நாட்டிற்கு அச்சுறுத்தல் ஏற்பட்டது. இதனால் மன்னர் மார்த்தாண்டவர்மா ஆற்றிங்கல்மீது படையெடுத்துச் சென்று அதனை கைவசப்படுத்தினார். இளவரசிகளின் அதிகாரத்தை முற்றிலுமாக நீக்கி, நிலங்களை மேற்பார்வை செய்யும் பொறுப்பை மட்டுமே அவர்களுக்கு வழங்கினார். நாட்டின் நிதி ஆதாரத்தைப் பெருக்கினார். கோட்டாறு, குளச்சல், இரணியல், தேங்காப்பட்டணம், கடியப்பட்டணம், விழிஞ்ஞும், அஞ்சுதெங்கு ஆகியப் பகுதிகள் திருவிதாங்கூரின் முக்கிய வணிக மையங்களாக விளங்கின.

ஆற்றிங்கல்லிற்கு அடுத்தபடியாக கொல்லத்தின்மீது மார்த்தாண்டவர்மா கவனத்தைத் திருப்பினார். அங்கே, அவரது மாமா உன்னி கேரளவர்மா ஆட்சி செய்து கொண்டிருந்தார். தளவாய் ஆறுமுகம்பிள்ளை தலைமையிலான இராணுவம் உன்னி கேரள வர்மாவை போரில் தோற்கடித்தது. காயங்குளத்தை கைப்பற்ற தளவாய் இராமையன் தலைமையில் 1734-இல் படை ஒன்றினை மார்த்தாண்ட வர்மா அனுப்பி வைத்தார். காயங்குளத்தை ராம வர்மாவின் சகோதரர் ஆட்சி செய்துவந்தார். இருப்பினும், அப்போரில் மார்த்தாண்ட வர்மாவின் தளவாய் இராமையன்

தலைமையிலான படை வெற்றிபெற இயலவில்லை. அதன்பின்பாக கொட்டாரக்கரை இளைய இடத்து சொரூபத்தின்மீது போர் தொடுத்தார். அங்குள்ள மன்னர் 1739–இல் மரணம் அடைந்ததை அடுத்து, அங்குள்ள இளவரசி ஆட்சிக்கு வருவதனை மார்த்தாண்ட வர்மா அங்கீகரிக்கவில்லை. அவள், அங்கிருந்து தப்பி தெக்கும்கூர் மன்னரிடம் அடைக்கலம் புகுந்தாள்.

மார்த்தாண்டவர்மா தனது அண்டை நாடுகளின்மீது நடத்திய படையெடுப்புகளால் டச்சுக்காரர்களின் வணிகம் கடுமையாக பாதிப்பிற்கு உள்ளானது. இதனால் திருவிதாங்கூர் படைகளுடன் மோதவேண்டிய சூழ்நிலை டச்சுவுக்கு ஏற்பட்டது. இருப்பினும், டச்சுக்காரர்கள் மார்த்தாண்ட வர்மாவுடன் சமாதான உடன்படிக்கை ஏற்படுத்திக்கொள்ள முயன்றனர்.

இதுசம்பந்தமாக, 1739 பிப்ரவரி 25 அன்று டச்சு கிழக்கிந்திய நிறுவனத்தின் இலங்கை ஆளுநர் வான் இம்காப் தேங்காப்பட்டணத்தில் மார்த்தாண்ட வர்மாவை சந்தித்துப் பேசினார். அப்பொழுது, வருடந்தோறும் ஒரு குறிப்பிட்ட விலையில் மிளகு தர வேண்டுமென வான் இம்காப் கோரிக்கை வைத்தார். அதனை மார்த்தாண்ட வர்மா ஏற்றுக் கொள்ளவில்லை. இவர்கள் இருவரின் சந்திப்பு மேலும் பிரச்சனையை வளர்த்துவிட்டன. டச்சுவினர், குளச்சலில் மிளகு வாங்க முயற்சி செய்தபோது, மன்னரின் அனுமதி இல்லாமல் தர இயலாது என உள்ளூர் வியாபாரிகள் மறுத்துவிட்டனர். இவ்வாறு தங்கள் வணிகம் பாதிக்கப்பட்டதால் மார்த்தாண்ட வர்மாவின் எதிரிகளோடு டச்சு நிறுவனம் கைகோர்த்தது.

ஏற்கனவே, டச்சுக்காரர்களுக்கும் திருவிதாங்கூருக்கும் நல்லுறவு இருந்ததில்லை. 1694–ஆம் ஆண்டு தேங்காப் பட்டணம் மற்றும் அஞ்சுதெங்கு பகுதிகளில் செயல்பட்டு வந்த டச்சுக்காரர்களின் வணிக மையங்களை உள்நாட்டு அரசியல் குழப்பங்களின் காரணமாக மன்னரின் படைகள் தீயிட்டு அழித்துவிட்டன. தேங்காப்பட்டணத்தில் டச்சுக்காரர்களின் தலைமை நிர்வாகி யோகன்சு கிட்டன்பர்க் இந்த கலவரத்தில்

கொல்லப்பட்டிருந்தார். அதற்கான இழப்பீட்டினை திருவிதாங்கூர் மன்னர்கள் தொடர்ந்து தர மறுத்ததால் திருவிதாங்கூர்மீது டச்சுக்காரர்கள் பகைமை கொண்டிருந்தனர்.

மார்த்தாண்ட வர்மாவின் இராணுவம் பலம்கொண்டு வளர்ந்து வருவதனைக்கண்டு தேசிங்கநாடு மற்றும் வடக்கும்கூர் நாடுகள் பயந்துபோய் இருந்தன. மார்த்தாண்ட வர்மாவுக்கு எதிராக இராணுவ உதவிகளைச் செய்துகொடுத்து அவர்களிடமிருந்து மிளகுவைப் பெற்றுக்கொள்ள டச்சு முன்வந்தது.

ஒவ்வொரு பருவ மழை முடிவிலும் மதுரை ஆட்சியாளர்கள் திருவிதாங்கூரை கொள்ளை அடிப்பதனை வழக்கமாக கொண்டிருந்தனர். அதனை தவிர்க்கும் பொருட்டு, அவர்களுக்கு திருவிதாங்கூர் மன்னர்கள் கப்பம் கட்டி வந்தனர். மதுரை ஆட்சியாளர்களின் தொல்லைகளில் இருந்து தப்பிப்பதற்காக மார்த்தாண்டவர்மா பிரெஞ்சுகாரர்களின் உதவியை நாடியிருந்தார். பிரெஞ்சுகாரர்கள், குளச்சல் பகுதியில் முழு வணிக உரிமையை மார்த்தாண்ட வர்மாவிடம் கோரினர். மார்த்தாண்டவர்மா, அதற்கு சம்மதம் தெரிவித்த நிலையில், தனக்குப் போட்டியாக பிரெஞ்சுகாரர்கள் திருவிதாங்கூர் பகுதியில் காலூன்றுவதனை விரும்பாத டச்சுக்காரர்கள் குளச்சலை தாக்க முடிவு செய்தனர்.

(குறிப்பு: மேற்படித் தகவல்கள் அனைத்தும் மார்க் டி லெனாய் எழுதிய, ‘தி குலசேகர பெருமாள் ஆப் திருவாங்கூர்’ நூலில் இருந்து திரட்டப்பட்டவை.)

**– திருத்தமிழ்த்தேவனார்**

**நூலின் உள்ளே...**

## அத்தியாயம் - 1

# குளச்சல் போர்

*1740 ஆகத்து மாத இறுதியில், பிரெஞ்சுவுடன் ஓர் ஒப்பந்தம் கையெழுத்திட்டதன் பேரில் பதினைந்தாம் லூயிசுக்கு மார்த்தாண்டவர்மா குளச்சலை விட்டுக் கொடுத்தார். அதன்பேரில் பிரெஞ்சு, குளச்சல் எல்லையை முழு ஆளுகையின்கீழ் எடுத்துக் கொண்டது மட்டுமில்லாமல், திருவிதாங்கூரிலிருந்து சிறிய சரக்குகளையும் மிளகுகளையும் வாங்கிக் கொள்ளும் அனுமதியையும் பெற்றது.[1] அதன்மூலம், பிரெஞ்சுவினர் இராணுவ ரீதியாக தமக்கு உதவுவார்கள் என்றும், தமக்கும் சந்தா சாகிப்புக்கும் இடையில் சமாதானம் செய்வார்கள் என்றும் மார்த்தாண்டவர்மா நம்பிக்கைக் கொண்டார். குளச்சலில் பல கப்பல்கள் வருவதற்கான ஏற்பாடுகளை செய்வதற்கு இரு பிரெஞ்சு பிரதிநிதிகள் திருவிதாங்கூர் அவைக்கு விரைவிலே வருகை புரிந்தனர்.[2] டச்சுவுக்கும் திருவிதாங்கூருக்கும் இடையில் நடந்துவரும் போர் ஆபத்தில் சிக்கிவிடக்கூடாது என்பதனையும் பிரெஞ்சு உணர்ந்திருந்தது. அதன்பேரில் ஆயுதங்கள் வழங்கும் விசயத்தில், 'லி போனிக்சு' கப்பலின் தலைவர் மொரோ கண்டிப்பான உத்தரவுகளைப் பெற்றிருந்தார்.*

> *"நாம் டச்சுவுடன் சமாதானமாக இருக்கிறோம். அவர்கள்மீது போர்தொடுக்கும் வகையில் ஆயுதங்கள் அல்லது ஏதாவது பொருட்களை நீங்கள் இந்த மன்னருக்கு (திருவிதாங்கூர் மன்னருக்கு) ஏதேனும் வகையில் விநியோகிக்காதீர்கள்".[3]*

*இது எவ்வகையிலும் மொரோவை தடுக்கவில்லை என்பதால் மார்த்தாண்ட வர்மாவுடன் பிரெஞ்சு பிரதிநிதி மொரோ வர்த்தகம் தொடர்பான பேச்சுவார்த்தை நடத்தியபோது, அப்பொழுதுதான் குடும்பத்தோடு பாண்டிச்சேரிக்கு வருகை புரிந்திருந்த சந்தா சாகிப்பை*

திருவிதாங்கூர் மன்னரோடு சமாதானப்படுத்த முயற்சி செய்தார். சந்தா சாகிப்பின் சகோதரரான பந்தா சாகிப் என்பவர் பாண்டிச்சேரி தளபதியிடம், அவருக்கான கப்பத்தை மார்த்தாண்டவர்மா கட்டிவிட்டால் அவரோடு உடனடியாக சமாதானமாகப் போவதாக வாக்குறுதி அளித்தார்.[4]

1740 செப்டம்பரில், இன்னும் ஒரு மணிக்கூர் நேரம்கூட திருவிதாங்கூர் மன்னரை சகித்துக்கொள்ள முடியாது என்றும், உடனடியாக தனக்கு உதவும்படியும், நெடுமங்காடு இளவரசி டச்சுவுக்கு அழுத்தம் கொடுத்தாள். இன்றுவரை, திருவிதாங்கூர் சிறையில் இருக்கிற அவளது இளைய சகோதரனை தொடர்பு கொள்வது தடை செய்யப்பட்டுள்ளது மட்டுமின்றி பட்டினிபோட்டு வைத்திருக்கிற பரிதாபமான நிலைமையை அகற்ற உதவிட வேண்டுமெனவும் டச்சுவிடம் அவள் கேட்டுக் கொண்டாள்.[5] டச்சுவுக்கு வேறு திட்டங்கள் இருந்ததால் அவளுக்கு உதவிட மறுத்துவிட்டனர். செப்டம்பர் இறுதியில், கடற்கரையில் வடகிழக்கு பருவமழை துவங்கிய நிலையில், உள்நாட்டில் சண்டை இடுவது சாத்தியமற்றது என்பதால் டச்சு ஆளுநர் வான் இம்காப்பின் தொடர் திட்டங்களை அவர்கள் விலக்கிக்கொண்டனர். அவர்களுடைய வடக்குக் கோட்டைகளான சீபோக் (பரவூர்) மற்றும் (கொலாண்டியோ) அய்ரூர் ஆகியவற்றோடு கூடுதலாக கன்னியாகுமரி வரையுள்ள தென்கடலோர பகுதிகளையும் டச்சுவின் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதும் தேவையாய் இருந்தது. நெசவுத் தொழிலுக்கு, தென்திருவிதாங்கூர் பிரசித்திபெற்று இருப்பதால் குளச்சல் முதல் கன்னியாகுமரி வரையுள்ள கடலோரப் பகுதிகளிலுள்ள நெசவு கூடங்களை அழிப்பதில் டச்சுவினர் முனைப்பு காட்டினர். கடலோரத்திலுள்ள அனைத்து திருவிதாங்கூர் துறைமுகங்களை முடக்குவதும் டச்சுவின் நோக்கமாகும். இதன்மூலம், திருவிதாங்கூரிலிருந்து மிளகு மற்றும் இதரச் சரக்குகளை ஏற்றுமதி செய்வது கடினமாகும். இது, மார்த்தாண்ட வர்மாவுக்கு முக்கிய வருமானமாக இருக்கிற சுங்கத்தை இழக்க வைக்கும். மிளகு மூலம் ஏற்றுமதி மற்றும் இறக்குமதியாகும் பொருட்களிலிருந்து மன்னருக்குக் கிடைக்கும் முக்கிய வருமானமே சுங்கமாகும். இத்தகைய வருமானம் இல்லாமல் போனால், மன்னர் மார்த்தாண்ட

வர்மாவால் டச்சு மற்றும் அவர்களது கூட்டாளி நாடுகளோடு போர் தொடுப்பதற்கான நிதியை திரட்ட முடியாமல் போகும். வடகிழக்கு பருவமழை முடிவுறும் நிலையில், பிப்ரவரியில், கடலோரத்தின் உள்பகுதிகளிலுள்ள மிளகுத் தோட்டங்கள், நெசவுத் தொழிலகங்கள் ஆகியவற்றை சூறையாடவும் அழிக்கவும் முடியும் என்பது 1739–இல் ஏற்கனவே வான் இம்காப் வகுத்திருந்த திட்டமாகும்.[6] திருவிதாங்கூர் மன்னரின் வருமானத்தை இழக்கச் செய்யும்போது ஆங்கிலேயரிடம் இருந்து அவர் மேற்கத்திய ஆயுதங்கள் வாங்குவதும் தடைபடும். இவ்வகையில் திருவிதாங்கூரின் செல்வம் விரைவில் திவாலாகும்போது, ஆங்கிலேயர்களின் உதவி முடிவுக்கு வந்துவிடுவது மட்டுமில்லாமல், உடனடியாக போரும் முடிவுக்கு வந்துவிடும் என்பது வான் இம்காப்பின் எதிர்பார்ப்பாகும்.[7]

வான் இம்காப்பின் சிந்தனைப்போக்கு அநேகமாக குறுகிய பார்வை உடையதாக இருந்ததற்கு காரணம் யாதெனில், அவர் கடல்வழிப் பணியை தொடர்ந்து செய்ததால் தென்இந்தியா போன்ற நாடுகளிலுள்ள உள்நாட்டு வியாபாரத்தில் குறைந்தளவு சாத்தியக் கூறுகளையே அவரால் கற்றுக்கொள்ள முடிந்தது. தென்பகுதியில் உள்ள மிளகு மற்றும் நெசவுத் தொழிற்சாலை மையங்கள் கோட்டாறின் உட்பகுதியிலும், குளச்சல் மற்றும் கல்குளத்திற்கு இடையிலும் இருந்ததால் அங்கிருந்து கோரமண்டலில் உள்ள மதுரைக்கு போக்குவரத்து செய்வது மிகவும் சுலபமானது. துறைமுகங்களை முடக்குவது மன்னரின் வருவாயை நிச்சயமாக இழக்கச் செய்யும் என்றாலும் மிளகு மற்றும் பிற சரக்குகளை தரைவழியாக கோரமண்டல் கடற்கரைக்கு கொண்டுசெல்ல முடியும்.

இருப்பினும், டச்சுவின் இந்த யுக்தியால் பல சாதகமான அம்சங்களும் ஏற்படத்தான் செய்தன. திருவிதாங்கூரில் இருந்து ஏற்றுமதியாகும் சரக்குகளை மட்டுமின்றி இறக்குமதியாகும் ஆயுதங்களையும் அவர்கள் தடுத்து நிறுத்தினர். அவர்களுடைய பாதையில் நங்கூரமிட்டிருந்த டச்சு கிழக்கிந்திய நிறுவன கப்பல்களிலிருந்து சரக்குகளை சுலபமாக கடற்கரையிலுள்ள கோட்டைகள் பெற இயலும் என்பதால் கொரில்லா

போருக்குப் பொருத்தமான அளவிற்கு அந்நாட்டினரை எதிரியாகப் பாவித்து சண்டையிட வேண்டிய தேவை ஒருபோதும் அவர்களுக்கு ஏற்பட்டதில்லை. இதைத்தவிர இன்னொரு சாதகமும் இருந்தது. இலங்கையில் இருந்து டச்சுவுக்கு உதவிப் படைகளோ, ஆயுதங்களோ வரவில்லை என்பதால் திருவிதாங்கூருக்கு எதிராக தொடர் இராணுவ நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டிய அவசியம் அவர்களுக்கு ஏற்படவில்லை. வானிலை திடீரென மோசமடைவதால் கனமான டச்சு பீரங்கிகளை உள்ளூர் பகுதிகளுக்கு சுமந்து செல்வது கடினமான காரியமாகும்.

1740 நவம்பர் 26 அன்று, டச்சு கப்பல்கள் கனமான குண்டு வீச்சினை குளச்சல் பட்டணத்தில் நிகழ்த்தத் துவங்கிய நிலையில், அது இரண்டு அல்லது மூன்று நாட்கள் வரை நீடித்தது. குடியிருப்பாளர்கள் தப்பி ஓடிய பின்பாக, டச்சு கப்பல்களால் துறைமுகம் முற்றுகையிடப்பட்டது. நெசவுத் தொழிற்கூடங்களுக்கு மேலும் அழிவு ஏற்படாமல் தடுப்பதற்கு இரண்டாயிரம் வீரர்களை குளச்சலுக்கு திருவிதாங்கூர் மன்னர் வெகுவிரைவாக அனுப்பி வைத்தார்.[8] கனத்த வடகிழக்குப் பருவமழைக்கான காற்று வீசிக் கொண்டிருந்ததால் குளச்சல் பட்டணத்தை டச்சுவால் கைப்பற்ற இயலவில்லை. எனினும், கொல்லம் முதல் கன்னியாகுமரி வரையுள்ள அனைத்து கடலோரப் பகுதிகளுக்கும் இடையூறாக டச்சுக் கப்பல்கள் நின்றன. இதனால் ஆங்கிலேயர்களின் வணிகம் மிகக் கடுமையாக பாதிக்கப்பட்டது. டச்சுவின் முற்றுகை பற்றி 1741 சனவரியில் ஆங்கிலேயர்கள் இவ்வாறாக புகார் செய்தனர்:

> “நமது நாட்டிற்கு எதிராக பதிலளிக்காத இந்த செயல்பாடுகள் நம்மை அதிகபட்ச அதிர்ச்சிக்கு உள்ளாக்கி இருக்கிற நிலையில், அனைத்து வகையான இழப்புகள், சேதங்கள் மற்றும் அவர்களிடமிருந்து (டச்சுவிடமிருந்து) நாங்கள் பெற்ற அவமானங்கள் ஆகியவற்றிற்கு எதிராக எழுதுவதையும், எதிர்ப்புகள் தெரிவிப்பதையும் தவிர, இந்த நிலைமையில் வேறெதுவும் செய்ய இயலவில்லை”.[9]

1741 பிப்ரவரி 9 அன்று, தைன் வான் கொல்லெனெசே உத்தரவின்பேரில், அதிக எண்ணிக்கையிலான கப்பல்கள்

கொச்சியிலிருந்து கொல்லத்திற்குப் புறப்பட்டன. 1739 – 1740 காலங்களில் நெடுமங்காடு மற்றும் கருநாகப்பள்ளி போர் நடவடிக்கைகளுக்குப் பின்பாக கொல்லத்திலுள்ள டச்சுவின் முக்கியப் படையானது பலம் குன்றி காணப்பட்டது. பிப்ரவரி 14 அன்று, 'பெர்க்கன்ரோட்' என்ற டச்சு கப்பல் குழுவினருடன் தைன் வான் கொல்லெனெசே இருந்தபோது தேசிங்கநாடு சந்தித்தார். தேசிங்கநாடு, நெடுமங்காடுவில் தங்கி இருப்பதாக உண்மையிலே உறுதி அளித்திருந்த நிலையில், இப்பொழுது நெடுமங்காடு இளவரசியால் அரியணை உறுதியாக நிறுவப்பட்டுவிட்டதால், அதற்குப் பதிலாக ஆற்றிங்கலை வென்றிட விரும்பினார்.[10]

கோட்டாறில் அமைந்துள்ள நெசவுத்தொழிற் கூடத்திற்கும், கல்குளத்தில் அமைந்துள்ள மன்னரின் அரண்மனைக்கும் அருகாமையில் அமைந்துள்ள குளச்சல் துறைமுகத்தை நோக்கி கொல்லத்திலிருந்து டச்சு கப்பல்கள் புறப்பட்டன. கடுமையான காற்று வீசிக் கொண்டிருந்ததால், குளச்சலில் கரை இறங்குவது சாத்தியமற்ற நிலையில், துறைமுக ஆக்கிரமிப்பை ஒத்திவைக்க வேண்டிய நிலைமை தைன் வான் கொல்லெனெசேவுக்கு ஏற்பட்டதால் டச்சு கப்பற்படை நங்கூரமிட்டு நின்றது. திருவிதாங்கூர்காரர்கள் கடற்கரையில் தங்களை பலமாக வலுப்படுத்தி கொண்டிருப்பதாக ஒற்றர்கள் அறிவித்தார்கள். குளச்சலைக் குறித்து கொச்சித் தளபதிக்கு பெரிய திட்டம் இருந்ததற்கான காரணம், கோட்டை சுவர்களில் பீரங்கிகளை பொருத்தினால்தான் கோட்டாறுக்கு செல்லும் சாலைகளை கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முடியும் என்பதும், அதுவே திருவிதாங்கூரின் சரக்குகளை வர்த்தக சேவைக்காக கொண்டுசெல்லும் முக்கிய போக்குவரத்துப் பாதையாக இருந்ததுமாகும். ஐரோப்பா பாணியில், கைப்பிடி சுவருடன், உத்தேசமாக முந்நூறு வீரர்களைக் கொண்டு, அரண்காவலர்களை அமர்த்தி கோட்டை கட்டப்பட வேண்டும். திருவிதாங்கூரின் வர்த்தக சரக்குகள் கையாள்வதனை கட்டுப்படுத்துவதன் மூலம் நிரந்தரமான மற்றும் கணிசமான இழப்புகளை திருவிதாங்கூர் மன்னருக்கு ஏற்படுத்தலாம்.

பிப்ரவரி 19 காலை ஐந்து மணிக்கு, டச்சுப் படையினர் கரையில் இறங்கும் நிலை இறுதியாக நடந்தேறியது. டச்சு கிழக்கிந்திய நிறுவனக் கப்பல்கள் கரையை நோக்கி பயணிக்க டச்சுப்படை வீரர்கள் கப்பலில் மறைந்தவாறும், திருவிதாங்கூரின் இருப்பிடத்தை நோக்கி சுடும் நிலையிலும் வரத் துவங்கினர். அவர்களிடம் மூன்று நாட்களுக்கான உணவுப் பொருட்களே இருந்தன. எறிகுண்டு வீசும் திறன்கொண்ட மூன்று குழுக்களும், இந்திய வீரர்களைக் கொண்ட இரண்டு குழுக்களும் என மொத்தம் நானூறுக்கு அதிகமான ஆண்கள் கடற்கரையில் காலடி எடுத்து வைத்தனர். இரண்டு மணி நேரத்திற்கு மேலாக நீடித்த சண்டையில் டச்சுப் பிரிவில் 22 வீரர்கள் மரணத்தை தழுவினர்; 17 வீரர்கள் காயம் அடைந்தனர். திருவிதாங்கூரினர் குழப்பமடைந்த நிலையில் தப்பியோடி மணற்குன்றுகளிலும், பனங்காடுகளிலும், தரிசு நிலங்களிலும் ஒளிந்து கொண்டனர்.[11] திருவிதாங்கூர் படையின் ஓர் பீரங்கியை டச்சுவினர் கைப்பற்றியதன் மூலம் குளச்சல் அவர்களுக்கு திறந்தே கிடந்தது.

திருவிதாங்கூரினர் பின்வாங்கி, கத்தோலிக்க ஆலயத்தின் பின்னால் மறைந்து கொண்டனர். டச்சுவினர் பல வீடுகளுக்கு தீ வைத்த நிலையில், ஆலயத்தையும் டச்சு மாலுமிகள் தாக்கினர்.[12] அவர்கள் ஆலயத்தின் கதவுகள் மற்றும் சன்னல்கள் வழியாக தோட்டாக்களால் சுட்டதில் சேசு சபை பாதிரியார் ஒருவர் ஆபத்தான நிலையில் தலையில் காயமடைந்தார். பிரெஞ்சு மற்றும் போர்ச்சுக்கீசியர் ஆகிய இருவரும் டச்சுவைப் பற்றி புகார் அளிக்கவும், போர் இழப்பீடுகளைக் கோரவும், தங்களது படைகளை திரும்பப் பெறச் செய்யவும் முடிவு செய்தனர்.[13] பிரெஞ்சு, கண்டனம் தெரிவிப்பதற்குக் காரணம் என்னவெனில் மார்த்தாண்டவர்மா ஆகத்து 1740–இல் குளச்சலை அவர்களுக்கு விட்டுக் கொடுத்திருந்தார். எதிர்பாராதவிதமாக, அவர்கள் குளச்சலில் புதிய தொழிற்சாலையை உருவாக்கி அதிகாரத்தை நிலைநிறுத்தும் சக்தியை இழந்ததற்கு காரணம் என்னவென்றால், மன்னாதி மன்னன் மாகியின் ஆட்சியாளரான வடகரை வாழுந்நவரை கோலாத்திரியில்

எதிர்ப்பதில் அவர்கள் முழுமூச்சாக இருந்ததே ஆகும்.[14] எனவே, டிரோயிசு, எல்லா கப்பல்களையும் மாகி நோக்கி திருப்பிச் செலுத்தும்படி உத்தரவு பிறப்பித்தார்.[15] இயேசு சபையினருக்கு எதிராக பல கொடூரமான துன்புறுத்தல்களை செய்ததாக டச்சுவினர்மீது போர்ச்சுக்கீசியர் குற்றம் சாட்டினர்.[16] ஐந்து சேசு சபையினரை கைதிகளாக டச்சுவினர் பிடித்து, 'ஆப்பர்டசு' என்ற கப்பலின் உள் அறையில் வைத்திருந்தனர் என்பது உண்மையிலே உறுதிபடுத்தப் பட்டதாகும். இந்த நடவடிக்கைக்கு டச்சுவினர் இரண்டு காரணங்களை முன்வைத்தனர்: முதலாவதாக, சேசு சபையினருக்கும் திருவிதாங்கூர் மன்னருக்கும் இடையேயான தொடர்பில் சந்தேகம் இருக்கிறது. இரண்டாவதாக, டச்சு வீரர்களின் தாக்குதலில் இருந்து அவர்களை பாதுகாத்தனர் என்பதாகும். குளச்சலை விட்டு ஓடிப்போன முக்குவர்கள் (கிறித்தவ மீனவர்கள்) வீடு திரும்புவதற்கு சேசு சபையினர் தூண்டுகோலாக இருக்க முடியுமென தைன் வான் கொல்லெனெசே நம்பினார். முக்குவர்கள், கூலிகளாக பணி செய்வதற்கும், கோட்டை கட்டுவதற்கும் முக்கிய தேவையாக இருப்பார்கள்.[17] குளச்சலை விட்டு ஓடிய குடியிருப்பாளர்கள் டச்சுவுக்கு உதவி செய்திட துணிச்சலுடன் திரும்பி வரமாட்டார்கள் என்றும், திருவிதாங்கூர் மன்னரின் கோபத்திற்கு ஆளாக நேரிடும் என்பதால் பயப்படுவார்கள் என்றும் தைன் வான் கொல்லெனெசேவிடம் சேசு சபையினர் கூறினர். சேசு சபையினர், டச்சுவின் சார்பில் அவர்களுக்கும் திருவிதாங்கூருக்கும் இடையில் உள்ள பிரச்சனை குறித்துப் பேச நடுவராக முன்வந்த நிலையில், டச்சு சார்பில் மன்னருக்கு எதிராக விடுக்கப்பட்ட எச்சரிக்கை குறித்து மன்னரிடம் சொல்வதற்கு மறுத்துவிட்டனர். "மன்னர் மிகவும் கர்வம் கொண்டவர்" எனச் சொன்ன அவர்கள், "எச்சரிக்கை கடிதத்தை அல்லது செய்தியை அவரிடம் சொல்ல நாங்கள் தைரியம் கொள்ளவில்லை, ஏனெனில் அவர்மீது நம்பிக்கை கொள்ள இயலாது" என்றனர்.[18] சேசு சபையினர் சிலர், 'ஆப்பர்டசு' டச்சுக் கப்பலிலிருந்து தப்பிச்சென்று டச்சுவின் திட்டம் குறித்து மார்த்தாண்ட வர்மாவிடம் தகவல் சொன்னார்கள்.

3 மார்ச் 1741 அன்று, குளச்சலில் தங்கியிருந்த போர் தந்திரக் குழுவானது செங்கற்களால் கோட்டை கட்டுவதற்கும், அதைப்போன்று மேற்கு பக்கமுள்ள கத்தோலிக்க ஆலயத்தின் பின்புறம் கொத்தளத்தை கட்டுவதற்கும், தலைவரும் பொறியாளருமான ஆண்டிரிசு லெசுலோரன்ட் என்பவரின் திட்டமிடல்படி கட்டுவதற்கு தீர்மானிக்கப்பட்டது.[19] இரண்டு வாரத்திற்குப் பின்பாக, டச்சுப் படையானது இரணியல் கோட்டையைத் தாக்கியது. திருவிதாங்கூர் மன்னர், இரணியலில் இருந்து வெளியேறியது மட்டுமின்றி படைகளுடன் பின்வாங்கி மலைகளில் அடைக்கலம் புகுந்தார்.[20]

மேலும், குளச்சலுக்கு வடக்கே முக்கிய கடல் துறைமுகமாகவும், துணி வணிக மையமாகவும் விளங்கிய தேங்காப்பட்டணத்தை டச்சுவினர் தாக்கினர். அதனைச் செய்வதற்கு அவர்களுக்கு இரண்டு காரணங்கள் இருந்தன. கோட்டாறு துணி வணிக மையத்திற்கு அடுத்தபடியாக இரண்டாவது இடத்தில் தேங்காப்பட்டணம் தொழில் மையம் இருந்ததால், அதனை அவர்கள் அழிக்க விரும்பினர். இரண்டாவதாக, ஆகத்து 1694–இல் தேங்காப்பட்டணத்தில் இருந்த அவர்களுடைய தொழிற்சாலையை திருவிதாங்கூர் அழித்தது மட்டுமின்றி, அதற்கான இழப்பீட்டுத் தொகையை ஒருபோதும் அளிக்கவில்லை என்பதால் பழிவாங்கும் நடவடிக்கையாக தாக்குதலை நடத்த விரும்பியது. அவர்கள், அங்குள்ள நிலவரங்களை அறிந்து யோசனை செய்வதற்கு ஏதுவாக ஒற்றர்களை நகரங்களுக்கு அனுப்பி வைத்தனர். ஒற்றர்கள் திரும்பிவந்து, தேங்காப்பட்டணத்தில் பிரெஞ்சு கொடிக்கு வணக்கம் செலுத்தப்படுவதாகவும், பெரும்படை பாதுகாப்பு அளிப்பதாகவும் அறிக்கை செய்தனர். அவர்கள் மேலும், ஐந்து கப்பல்களைப் பார்த்ததாகவும், அவைகள் பிரெஞ்சுவுக்கு உரியதாக கருதுவதாகவும், குளச்சலுக்கும் தேங்காப்பட்டணத்திற்கும் இடைப்பட்ட பகுதிகளில் அவை நிற்பதாகவும் கூறினர். முன்கூட்டியே, பிரெஞ்சுவின் தேங்காப்பட்டணம் இருப்பானது டச்சுவுக்கு எச்சரிக்கையை அளித்தது. அவர்கள், தாக்குதல் நடத்துவதற்கு தங்களுடைய கப்பல்களை அங்கு அனுப்பினர். தேங்காப்பட்டணம்

குடியிருப்புவாசிகள், அவர்கள் பாதையில் வருகிற டச்சுக் கப்பலை பார்த்தவுடன் திகிலடைந்து உள்நாட்டுக்குள் ஓடினார்கள். டச்சு நினைத்ததுபோல், தேங்காப்பட்டணம் கோட்டை உண்மையாகவே நன்கு எதிர்க்கும் திறனைக் கொண்டிருக்கவில்லை. திருவிதாங்கூர் மன்னர் ஒரு தந்திரம் கையாண்டிருந்தார். அவர், தொப்பிகள் வைத்திருந்த பாதுகாப்பாளர்களிடம் அவைகளைக் கழற்றி நீள குச்சிகளில் தொங்கவிடும்படி உத்தரவு பிறப்பித்தார். மேலும், கோட்டை வளைவுத் துவாரங்களில் துப்பாக்கிகள் தெரியும்படியும் வைத்திருந்ததால், அது பார்ப்பதற்கு கோட்டையை பெரியளவில் காவல்படை காவல் காப்பதுபோல் காட்சியளித்தது.[21] இருப்பினும், 26 மார்ச் 1741 அன்று டச்சுவினர் தேங்காப்பட்டணத்தைத் தாக்கினர். கடுமையான குண்டு வீச்சுக்குப்பிறகு, அவர்கள் கடற்கரையில் காலடி எடுத்து வைத்தது மட்டுமின்றி, வீடுகளையும் கோயில்களையும் தீக்கிரையாக்கினர். அவர்கள் பலரை கைதிகளாக பிடித்ததில் பெண்களும் குழந்தைகளும் இருந்தனர். அவர்களில் 14 வயதிற்கு மேற்பட்டவர்களை டச்சு கிழக்கிந்திய நிறுவனத்திடம் அடிமைகளாக விற்கும்பொருட்டு நபர் ஒருவருக்கு 12½ ரிச் டாலர்கள் (உத்தேசமாக 22.5 ரூபாய்கள்) வீதமும், கைதிகள் வாலிபராக இருந்தால் போர் வீரர்களே அவர்களை வைத்திருக்கவும் அனுமதிக்கப்பட்டனர். நாயர் பிடிபட்டிருந்தால் அதிக விலையாக போர் வீரர்களுக்கு 20 ரிச் டாலர்கள் (உத்தேசமாக 35.60 ரூபாய்கள்) வழங்கப்பட்டன.[22]

தெற்கில் டச்சுவின் போர்காரியங்கள் வலுவாக இருந்தது என்பது நிருபிக்கப்பட்டு இருந்தது. ஆனால், நெடுமங்காடு போர்காரியங்களில் தேசிங்கநாடு நடவடிக்கை எப்படிப் போய்கொண்டிருக்கிறது? நெடுமங்காடுவில் உள்ள கொட்டாரக்கரை அவையில் பல தரப்பினரும் சுறுசுறுப்பாக செயல்பட்ட நிலையில், அவர்களில் திருவிதாங்கூரினர் மற்றும் தேசிங்கநாட்டினர் முக்கியமானவர்கள். இருதரப்பினர் நிலையும் அரசியல் சூழ்நிலைக்கு ஏற்ப மாறக்கூடியதே. பிப்ரவரி இறுதியில், திருவிதாங்கூருக்கு ஆதரவாளராக இருந்த வடக்கு நாவாய்குளத்தைச் சார்ந்த பள்ளிக்கல் குறுப்புவின்

பண்ணையை தேசிங்கநாடு தீயிட்டுக் கொளுத்தியது. இதர ஆதரவாளரான அவரது ஏனைய உறுப்பினர்கள் குழக்கெளுத்தான், குமல்லூரத்தான், மலையிலத்தான், கம்பிலேத்தான், சாலயிலேத்தான், மாங்காட்டுத்தான், அதுக்காட்டுத்தான், அம்பலயிலேத்தான் ஆகியோர் இந்தத் தண்டனைக்கு எதிராக கோபம்கொண்டு தேசிங்கநாடுவுடன் வெளிப்படையாகவே போரை அறிவித்தனர்.[23] அது இன்னும் மோசமாக இருந்தததற்கு காரணம் என்னவென்றால், இந்த பிரபுக்கள் மார்த்தாண்ட வர்மாவிடம் உதவி கோரிய வேளைக்கு சற்று முன்பாகத்தான் சந்தா சாகிப்பின் படைகளுக்கு மார்த்தாண்டவர்மா பணம் கொடுத்திருந்தார்.

திருவிதாங்கூர் படைகள் வந்து தாக்கக்கூடும் என்கிற அச்சுறுத்தலை உணர்ந்த தேசிங்கநாடு டச்சுவிடம், கல்குளம் மற்றும் திருவனந்தபுரம் ஆகிய இரண்டையும் குளச்சலில் இருந்தபடி தாக்குதல் நடத்த வேண்டுமென கேட்டுக் கொண்டது. அவ்வாறு நடந்தால்தான் கிளிமானூரில் உள்ள தன்னுடைய படைகள்மீது இருக்கிற திருவிதாங்கூர் இராணுவத்தின் அழுத்தம் விலகும் என்றார்.[24] உண்மையாகவே தேங்காப்பட்டணத்தை டச்சு தாக்கியதன் மூலம் திருவிதாங்கூரின் தாக்குதலால் நெடுமங்காடுவிலிருந்து துண்டிக்கப்பட்ட நிலையில் இருந்த தேசிங்கநாடுக்கு அது உதவிகரமாக இருந்தது. அவர் வெகுவிரைவாக கிளிமானூரை விட்டு வெளியேறியவுடனே திருவிதாங்கூரால் அவை கைவசப்படுத்தப்பட்டது.[25] ஆனால் மார்த்தாண்ட வர்மாவால் அக்கோட்டையை வெகுநாள் வைத்துக்கொள்ள இயலவில்லை. 16 மார்ச் 1741 அன்று, மூன்று மணி நேரம் நீடித்த போருக்குப் பின்பாக கூட்டாளிகள் கோட்டையை மீட்டு நெடுமங்காடுவுக்கு பாதுகாப்பான ஓர் நுழைவாயிலை ஏற்படுத்தினர். நானூறு வீடுகளுக்குமேல் தீக்கிரையாக்கப் பட்டன. போர் காரியங்களில் தொடர்ந்து முன்னேறிச் செல்வதற்குப் பதிலாக தேசிங்கநாடு கிளிமானூரோடு நிறுத்திக் கொண்டார். தெய்வ மரியாதையுடன் நெடுமங்காடுவில் பத்திரகாளி அம்மன் திருவிழா நடைபெறுவதை அவர் காரணம் காட்டினார். இந்த வருடாந்திர திருவிழாவானது பரணி என அழைக்கப்பட்டது. இதன் ஒருபகுதியாக,

தேசிங்கநாட்டு இராணுவத்திலுள்ள ஈழவ வீரர்கள் பத்ரகாளி கோவிலுக்கு புனித யாத்திரை மேற்கொள்வர். யாத்ரீகர்கள், தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும், அவர்களுடைய உறவினர்கள், நண்பர்கள் ஆகியோருக்கு அம்மை மற்றும் காலரா நோயிலிருந்து பாதுகாப்பு பெறவும் அங்குள்ள பத்ரகாளிக்கு சேவல்களை காணிக்கையாக செலுத்துவர்.[26]

குளச்சலில் டச்சுவினர், புதிய திட்டங்களை உருவாக்கி அவ்விடத்தை வலுப்படுத்த நினைத்தனர். லெசுலோரன்ட், மூன்று மண் அரண்களை கட்ட தீர்மானித்ததில், ஓர் அரண் செங்கல் அரணாகவும், அதில் 30 பீரங்கிகளைப் பொருத்தும் வகையிலும் அமையும். தானியங்களையும், ஏனைய பொருட்களையும் வைக்கும் ஒரு பண்டகச்சாலையாக தேவாலயம் பயன்பட்டு வரும் நிலையில், வீரர்கள் தங்குவதற்கு மரத்திலான ஒரு கொட்டகையை தேவாலயம் அருகில் கட்ட தீர்மானிக்கப்பட்டது. இதற்கிடையில், எதிர்தாக்குதல் ஒன்று உடனடியாக நடப்பதற்கான அறிகுறிகள் தென்பட்டன. ஏப்ரல் 1–ஆம் தேதி, ஐரோப்பியர்களைப் போன்று ஆடைகளை அணிந்துகொண்டு, படைக்கலம் பூண்ட நிலையில், வளைவுத் துப்பாக்கியுடன் 300 திருவிதாங்கூர் போர் வீரர்கள் குளச்சல் முன்பாக தோன்றினர். திருவிதாங்கூரின் இரண்டாவது இளவரசர் இராமவர்மா தலைமையில் உள்ளூர் வீரர்களும், 300 மறவர் குதிரைப் படையும் அவர்களோடு வலம் வந்தன. மேலும், 1000 படை வீரர்களும் அவர்களோடு இணைந்து கொண்டனர். அடுத்தடுத்த நாட்களில் அதிக எண்ணிக்கையில், வலுவூட்டும் வகையில் கல்குளத்தில் இருந்து இரணியல் நோக்கி படைகள் அணிவகுத்து வந்தன. அங்கே பரவிய வதந்தி யாதெனில், நாயர்களுக்கும் மறவர்களுக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் குளச்சல்மீது திருவிதாங்கூர் தாக்குதல் நடத்துவதற்கு காலதாமதம் ஆகிறது என்பதாகும்.[27]

அதேநேரத்தில், அஞ்சுதெங்குவில் இருந்த சால்வடோர் ரோட்ரிகூசு என்ற ஆங்கில மொழிபெயர்ப்பாளர் கொல்லத்தில் இருந்த அவருடைய மைத்துனர் செபத்தியான் பெர்னாண்டசுக்கு, பெரிய அளவிலான தாக்குதலை குளச்சலில் திருவிதாங்கூர் நடத்த திட்டமிடுவதாக கடிதம் எழுதினார். அதில், பெயரினைக் குறிப்பிட்டு, மறவர்களின்

தலைவராகிய பொன்னன் பாண்டியத்தேவர் மகன் குமாரத்தேவர் என்பவர் திருவனந்தபுரத்தில் இருந்து குளச்சலுக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளார் என்கிற செய்தியை கூறியிருந்தார். குமாரத்தேவர், கட்டளை பிறப்பிப்பதன்மூலம் மறவர்களை அங்கே ஒன்றுசேர்த்து தற்கொலைப் படையை உருவாக்குவார். ஒருவேளை அவர் உயிரோடு மீண்டுவந்தால், அவருக்கு பல்லக்கு அளிப்பதாக மார்த்தாண்டவர்மா உறுதி அளித்துள்ளார்.[28]

டச்சுவினர் மென்மேலும் எச்சரிக்கையாக, குளச்சல் கோட்டையை இருமடங்கு முயற்சிசெய்து முடிந்தளவு விரைவாகவே கட்டிமுடிக்க முயன்றனர். ஏப்ரல் 5 அன்று, அதுவரையிலும் கோட்டைக்கு வெளிப்புறத்தில் வைத்திருந்த பீரங்கியை அவர்கள் திரும்ப எடுத்துக்கொண்டனர். குளச்சலில் தண்ணீர் இல்லாததால், அதனைப் பெற்றுக்கொள்ளும் பொருட்டு முகாமைவிட்டு வெளியே செல்வது அதிக அபாயத்தை ஏற்படுத்தும். அதனால் கோட்டைக்குள்ளே ஒரு தண்ணீர் தொட்டியை ஏற்படுத்த முடிவு செய்தனர்.[29]

அடுத்தநாள் 6 ஏப்ரல், மிக வடக்கே, அய்ரூர் அருகிலுள்ள தொட்டக்கோட்டை என்ற இடத்தில் தேசிங்கநாடு மற்றும் இளவரசியின் படைகள் திருவிதாங்கூரினரை தோற்கடித்தனர். இந்த, போர் சூழலானது அதிகபட்ச நம்பிக்கையை தைன் வான் கொல்லெனெசேவுக்கு அளித்ததால், குளச்சலை விட்டுச் செல்லவும், அவர்களின் பொதுவான போர்த்திறஞ் சார்ந்த விசயங்களில் முடிவுசெய்ய, அவருடைய கூட்டாளிகளை ஆலோசனைக்கு அழைக்கவும் முடிவு செய்தார்.[30] அவருக்குப் பின்பாக பொறுப்பேற்கக்கூடிய அதிகாரிகளுக்கு செயல் திட்டங்களையும் எழுதினார். தலைமைத் தளபதியாக காக்கர்ட், கோட்டையின் கண்காணிப்பாளராக ஆன்டிரிசு லெசுலோரன்ட் மற்றும் 250 ஐரோப்பியர்கள், 50 உள்நாட்டு வீரர்கள், இரண்டு கொடி வீரர்கள் அடங்கிய படைப் பிரிவிற்குத் தளபதியாக யோகான் கிறித்தியன் ரிசித்தல் என்பவரும் நியமிக்கப்பட்டனர்.[31] கோட்டை கட்டிடத்தை முடிந்தளவு விரைவாக முடிக்கும்படி தனது அடுத்தநிலை அதிகாரிகளுக்கு தைன் வான் கொல்லெனெசே அறிவுரை வழங்கினார். வழக்கமான

சம்பளத்தில் ஐரோப்பிய வீரர்கள் கட்டுமானப் பணியில் உதவிடவும், அதேசமயம் முக்குவர்களிடம் நல்ல வார்த்தைகள் பேசி கட்டுமானப் பணியில் இணங்கச் செய்ய வேண்டும் எனவும் அறிவுறுத்தப்பட்டது.[32]

11 ஏப்ரல் 1741 அன்று, தேசிங்கநாடுவை சந்திக்கும் நோக்கில் தைன் வான் கொல்லெனேசே உண்மையாகவே குளச்சலை விட்டு கொல்லம் சென்றார். அவர் நினைத்தது என்னவென்றால், வடக்கில் இருக்கும் கூட்டாளிகள் பெரும் வெற்றியைப் பெற்றுள்ளதால் 200 படைவீரர்களை தன்னோடு அழைத்துக்கொண்டு குளச்சலை விட்டுச் செல்லலாம் எனக் கருதினார். கொல்லத்திலும் கொழும்புவிலும் அவர்களின் தேவை அவசியமாக இருந்தது. ஆனால் தளபதி காக்கர்ட், மூத்த அதிகாரியின் திட்டத்தை கடுமையாக எதிர்த்ததால், அதன்விளைவாக 100 படைவீரர்களுடன் கொல்லெனேசே செல்ல வேண்டியதாயிற்று.[33] அடுத்தநாள், ஓர் ஒற்றன் காக்கர்ட்விடம் தைன் வான் கொல்லெனேசே குளச்சலை விட்டு சென்றுவிட்டது மார்த்தாண்ட வர்மாவுக்கு தெரியும் என்றும், அடுத்தநாள் மாலையில் கோட்டையைத் தாக்குவதற்கு திட்டமிட்டிருப்பதாகவும் தகவல் கொடுத்தான். அதனால், வெளியில் ஊடுருவியிருந்த சில படை வீரர்களை திரும்பி விடும்படி காக்கர்ட் உத்தரவு பிறப்பித்தார்.[34]

14 ஏப்ரல் 1741–இல், தேசிங்கநாட்டு காரியக்காரர் ஒருவர் ஐரோப்பிய ஆயுதமான வளைவு கை துப்பாக்கிகளைக் கொண்டிருந்த 150 வீரர்களுடனும், வில்லும் அம்புகளும் ஏந்திய 500 போர் வீரர்களுடனும் விலகி திருவிதாங்கூரில் இணைந்து கொண்டார். விரைவில், அதிகமான காரியக்காரர்கள் (உள்ளூர் ஆளுநர்கள்) பின்தொடர்ந்தனர்.[35] அதனால், தேசிங்கநாட்டின் செல்வாக்கானது சந்தர்ப்பத்தால் வீழ்ச்சி அடைவதுபோல் தோன்றியது மட்டுமின்றி திருவிதாங்கூரின் சார்பு அணுகுமுறையில் இரண்டாவது இளவரசரின் செல்வாக்கு அதிகரித்ததுபோல் ஆனது.

ஏப்ரல் 15 அன்று, தேசிங்கநாடு மற்றும் தைன் வான் கொல்லெனேசே ஆகியோரின் திட்டத்தின்படி கொல்லத்தில் வைத்து ஒருவரையொருவர் சந்தித்துக் கொண்டனர்.

திருவிதாங்கூருக்கு எதிரான போரை தேசிங்கநாடு தொடர்ந்து நடத்த வேண்டும் என்பதனை ஊக்குவிப்பது கொச்சித் தளபதிக்கு கடினமாக இருந்தது. இளவரசர் முறையிட்டது என்னவென்றால், அண்டை நாட்டின்மீது படையெடுப்பது உள்நாட்டு பழக்கவழக்கப்படி தவறானது.[36] டச்சுவினர், தேசிங்கநாட்டின் நோக்கத்தை சரியாக தெரிந்து கொள்ளாததால் அதனை நகைப்புக்குரிய சாக்குபோக்காக நினைக்க நேரிட்டது. அவர்கள் அறிந்தது என்னவென்றால், திருவிதாங்கூருடன் சண்டையிட தேசிங்கநாட்டிற்கு விருப்பமில்லாமல் போனதற்கு நிதி பற்றாக்குறையே முதன்மைக் காரணமாக இருக்கிறது. நீடித்திருந்த பல்வேறு சொரூபங்களின் வாரிசுரிமைப் போராட்டங்களை டச்சுவினரால் புரிந்துகொள்ள இயலவில்லை. நெடுமங்காடு அரியணையில் தேசிங்கநாடு அமர வேண்டும் என்கிற அவருடைய கோரிக்கைக்கு டச்சு உதவிசெய்ய மறுத்ததால்தான் திருவிதாங்கூருக்கு எதிராக தொடர்ந்து போரிட தேசிங்கநாடு விரும்பவில்லை என்கிற உண்மையான காரணத்தை டச்சுவினரால் உணர முடியவில்லை.

தைன் வான் கொல்லெனேசே நினைத்தது என்வென்றால், நெடுமங்காடு இளவரசி ஒரு இளவரசரை தத்தெடுக்கும் நிலையில், இன்றுவரை திருவிதாங்கூர் சிறையில் இருக்கும் நெடுமங்காடுவின் முறையான இளவரசரால் வாரிசுரிமை பிரச்சனையை உருவாக்கும் பொருட்டு, அவளுடைய இளைய சகோதரனை திருவிதாங்கூர் உடனடியாக விடுதலை செய்யும் என்பதாகும்.[37] நெடுமங்காடுவில் புதிய இளவரசரை உருவாக்கும் அவரது திட்டத்தை அறிந்த தேசிங்கநாடு விரக்தியடைந்த நிலையில், அடுத்த சிறந்த விருப்பத்தை தேர்வு செய்தார். டச்சுவிடமிருந்து பணமும் ஆயுதமும் பரிமாற்றம் செய்து கொண்டதோடு, பரவூர் சுற்றியுள்ள பகுதிகளை நெடுமங்காடு இளவரசியிடம் இருந்து பிணையாகப் பெற்றுக் கொண்டதோடு, அவளுக்கு உதவி செய்வதாக உறுதிகூறியது மட்டுமின்றி, திருவிதாங்கூருக்கு எதிராக தொடர்ந்து செயல்படப் போவதாக வாக்குறுதியும் அளித்தார்.[38]

அடுத்தநாள் ஏப்ரல் 16 அன்று, நெடுமங்காடு இளவரசியை தைன் வான் கொல்லெனேசே சந்தித்தார். அவளோ, நாடு கடந்து காயங்குளம் எல்லையிலுள்ள தெக்கும்கூரிலுள்ள மண்ணடி என்னுமிடத்தில் வாழ்ந்து வந்தாள். மண்ணடி என்பது ஓர் நாடு அல்லது அடிமைபடாத அந்த நிலமானது கொச்சி மன்னரின் உறவினரான இடப்பள்ளி இளவரசரின் பாதுகாப்பில் இருந்தது.[39] அவளுடைய அரியணையை மீட்டுத் தருவதாக டச்சுவினர் விருப்பம் கொண்டிருப்பதாக கூறியதன்பேரில் நெடுமங்காடு இளவரசி மகிழ்ச்சி அடைந்தார். தைன் வான் கொல்லெனேசே முன்மொழிந்த கோரிக்கை யாதெனில், அனைத்து மாடம்பிமார்களும் கூட்டாளிகளுடன் இணைய வேண்டுமென்பதே. இதனை அவர்கள் நிராகரித்தால், அவர்களை எதிரிகளாகப் பாவித்து தண்டனை வழங்க வேண்டும்.[40] அதேநேரத்தில், அவர் முன்மொழிந்தது யாதெனில், தேசிங்கநாடு அறிவுறுத்தியதுபோன்று, இளவரசர் ஒருவரை இளவரசி இன்னொரு சொரூபத்தில் இருந்து தத்தெடுக்க வேண்டும். ஆனால், அவளுடைய ஆலோசகர்கள் அதில் அதிக ஆர்வம் குறைந்தவர்களாக இருந்தது மட்டுமின்றி, திருவிதாங்கூரால் இன்றுவரை சிறைபிடிக்கப்பட்ட 16 அல்லது 17 வயதுடைய சட்டப்படியான இளவரசர் விடுதலை அடையும்போது தத்தெடுப்பு விசயத்தில் அதிக சிரமங்களை எதிர்கொள்ள வேண்டியதிருக்கும் என வாதம் செய்தனர்.

ஏப்ரல் 17 அன்று, தைன் வான் கொல்லெனேசே கடல் வழியாக கொல்லத்தை விட்டு புறக்காடு தலைமையகம் அமைந்துள்ள அம்பலப்புழா அருகிலுள்ள காரூரில் ஆட்சி செய்பவர்களின் கூட்டத்தில் பங்கெடுப்பதற்காக சென்றார். அங்குள்ள இளவரசர், குளச்சலிலுள்ள டச்சுக் கோட்டையின் கட்டுமானம் குறித்த சமீபத்திய செய்திகளையும், போதுமான அளவில் அது தாக்குதலை எதிர்கொள்ளத்தக்கதா என்பது குறித்தும் ஆர்வமுடன் விசாரித்தார். ஐந்தாயிரம் படை வீரர்கள் வந்தாலும் கோட்டையை கைப்பற்ற முடியாது என தைன் வான் கொல்லெனேசே பீத்துப் பெருமையுடன் பேசினார். துணுக்கிற்காக அவர், பிடிபட்ட சில திருவிதாங்கூர் சொக்கன்களிடம் குளச்சல் கோட்டையை காண்பித்ததாக

சொன்னார். அதன்பின்பாக, பதினைந்து நாட்களுக்குள் கோட்டையைத் தாக்குவது சிறந்ததாக இருக்கும் என்பதனை திருவிதாங்கூர் மன்னரிடம் சொல்வதற்காக அவர்களை விடுவித்தேன் என்றார். அந்த கூட்டத்திற்குப் பின்பாக தைன் வான் கொல்லெனெசே கொச்சிக்கு திரும்பினார்.[41]

தைன் வான் கொல்லெனெசே கூறியபடி உண்மையிலேயே குளச்சல் சிறப்பான முறையில் தாக்குதலை எதிர்கொள்ளத்தக்கதா? கட்டிடப் பணிகள் கணிசமாக தாமதமானதற்கு காக்கர்ட் மற்றும் லெசுலோரன்ட் ஆகியோர் தைன் வான் கொல்லெனெசே வழங்கிய உத்தரவுகளைப் பின்பற்றாததேயாகும். உதாரணத்திற்கு, ஐரோப்பியர்களுக்கு கட்டுமானப் பணியிலிருந்து விலக்கு அளிக்க காக்கர்ட் முடிவு செய்தது மட்டுமில்லாமல், பணி புரியும் இந்திய வீரர்களைவிட ஐரோப்பியர்களை உயர்வாக நடத்தினார். இது நிச்சயமாக இந்திய வீரர்களுக்கு அதிருப்தியை ஏற்படுத்தியது மட்டுமின்றி, இறுதியாக அவர்கள் கட்டிடப் பணியிலிருந்து விலகிக் கொண்டதற்கு, அவர்களை இழிவானவர்கள், சோம்பேறிகள் என லெசுலோரன்ட் கருதியதேயாகும். அவர் மேலும், குளச்சல் கட்டிடப் பணி தாமதமானதற்கு அவர்கள்தான் காரணம் என்றும், அவர்களை வேலைக்கு அமர்த்தியதால்தான் டச்சுவின் பணமும் நேரமும் அதிகளவில் வீணானதாகவும் குற்றம் சாட்டினார்.[42] அதனால் நானூறு முக்குவர்களை கூலிக்கு அமர்த்த காக்கர்ட் முடிவு செய்தார்.

18 ஏப்ரல் அன்று, வடபகுதிலும், தென்பகுதியிலும் உள்ள குளச்சல் அரண் நிறைவு செய்யப்பட்ட நிலையில், ஒன்பது பீரங்கிகளை அதில் பொருத்தியபோது அவை சரிந்தன. பீரங்கிகள் பெரியவையாக இருந்ததால், வீரர்கள் நிற்பதற்கு போதிய இடமில்லாமல் போயிற்று. கோட்டையின் நான்கு அரண்களில், மூன்று மண்ணினால் செய்யப்பட்ட நிலையில் பீரங்கியின் பாரத்தால் அரண் சரிந்தது. லெசுலோரன்ட், அந்த சேதத்தை தற்காலிகமாக சரிசெய்தார்.[43]

கோட்டையின் உள்ளே நல்ல குடிநீர் கிடைக்கவில்லை; அங்கு தொட்டி கட்டி முடிப்பதற்கு போதுமான சுண்ணாம்பு பற்றாக்குறையாக இருந்தது. குடிப்பதற்கு ஏதாவது தேட

வேண்டுமென்றால் நீருக்காக கோட்டையை விட்டு டச்சுவினர் வெளியே செல்ல வேண்டும் அல்லது அதற்குப் பதிலாக குறைந்து கொண்டே வருகிற சாராயத்தைத்தான் குடிக்க வேண்டும். கட்சாங் (ஒருவகையான பருப்பு வகை), வங்காள வெண்ணெய் மற்றும் அவரைக்காய் ஆகியவை அரிதாகிவிட்டதால், அங்கே போதுமான உணவும் இல்லை. உணவு தட்டுப்பாடு வீரர்களுக்கு அழுத்தம் கொடுத்தது மட்டுமின்றி, வலுகட்டாயமாக திருவிதாங்கூர் எல்கைக்குள் அதனைத் தேடிக் கண்டுபிடிக்க அவர்கள் பிரிந்து சென்றபோது, அது அவர்களில் பலரின் உயிரையும் பறித்தது.[44] மேலும், விறகு மற்றும் கட்டிடப் பொருட்கள் தட்டுப்பாடு நிலவும் என்பதால் கோட்டையின் அருகில் போதுமான பனை மரங்கள் இருப்பது அதன் நோக்கத்தை நிறைவு செய்யுமென தைன் வான் கொல்லெனெசே குறிப்பிட்டிருந்தார். இன்னும் இறங்குதளத்தில் நின்றுகொண்டிருக்கிற, 'காச்திரிகம்' கப்பலில் இருந்து வெடிமருந்துகளை எடுத்துவர அவர் காக்கர்ட்வுக்கு அறிவுறுத்தி இருந்ததை அவர் நிறைவேற்றி முடித்திருந்தார். ஆனால் இது அனைத்து வகையான பிரச்சனைகளையும் தீர்க்க உதவவில்லை. உதாரணத்திற்கு, குளச்சல் கோட்டை வாயிலை பூட்டுவதற்கான பூட்டு கிடைக்கவில்லை.[45] தைன் வான் கொல்லெனெசேவின் பரிந்துரைகள், கட்டிடப் பணிகளை துரிதப்படுத்துவதற்கு உதவவில்லை. மாறாக, கொச்சிக்கு புதிய புகார்கள் சென்றன. வீரர்களுக்கான வீடுகள் தயாராகாததும், பொருட்கள் அனைத்தும் திறந்தவெளியில் சேமிக்கப்பட்டு கிடந்ததும் காக்கார்ட்டை எரிச்சல் அடையச் செய்தன. ஏப்ரல் நடுவில், வானிலை மோசமடைந்த நிலையில், தென்மேற்கு பருவமழை இந்த வருடத்தில் நேரமே பெய்ததால் கோட்டைக் காவலர்கள் முந்நூறு பேர் நோயுறும் நிலைக்குத் தள்ளப்பட்டதும் அல்லாமல் பலமான காற்று குளச்சலில் நிறுத்தப்பட்டிருந்த கப்பல்களுக்கு ஆபத்தை விளைவித்தது.[46]

ஏப்ரல் 20 மற்றும் 21 மாலை, கடற்கரையை நாசஞ்செய்யும் அளவிற்கும், வழிப்பாதையில் டச்சு கிழக்கிந்திய நிறுவனத்தால் நங்கூரமிட்டிருந்த கப்பல்களை அச்சுறுத்தும் வகையிலும், பாயின் உச்சியில் மோதும் அளவிற்கும் கடுமையான புயல் ஏற்பட்டது.[47] 'சோட்டலிங்கெர்க்' கப்பலானது ஏறக்குறைய அனைத்து நங்கூரங்களின்

*பிடிப்புகளையும் இழந்தது. 'காச்திரிகம்' என்ற இன்னொரு கப்பலின் தலைவன், உதிரி நங்கூரங்களை நிதர்சன மர்மமாக 'சோட்டலிங்கொர்க்' கப்பலுக்குக் கொடுத்து உதவ மறுத்தார்.[48] குளச்சலில் நிலவிய இன்னொரு பிரச்சனை என்னவென்றால், வீரர்களின் பெருநெரிசல்களுக்கு அவர்களின் தலைக்குமேல் அமைந்திருந்த கூரைகள் நல்லவையாக இல்லாததே ஆகும். அவர்கள், கோட்டையின் அருகே கட்டப்பட்ட ஒரு பாதுகாக்கப்பட்ட தற்காலிக கட்டிடத்தில் தூங்கினார்கள்.[49]*

*ஒரு வாரத்திற்குப் பின்பாக, தைன் வான் கொல்லெனெசேவிடம் இருந்து காக்கர்ட்வுக்கு வந்த ஓர் உத்தரவில், தேசிங்கநாடு மற்றும் நெடுமங்காடு இளவரசி படைகளோடு அவருடைய முதன்மைப் படை கொல்லத்தில் இணைந்து கொள்ள வேண்டுமென குறிப்பிடப்பட்டிருந்தது. அங்கிருந்து ஒன்றுதிரண்ட படைகளாக நாவாய்குளத்தில் திருவிதாங்கூரினரை தாக்க வேண்டும்.[50] தீங்கு ஏற்படுத்துகிற வலுவான காற்றால் டச்சுவினர் கொல்லத்திற்கு செல்லவேண்டிய பயணமானது தடுக்கப்பட்டது. அதேவேளையில், எதிர் பாதையில் பயணிப்பது என்பது சாத்தியமாகும். 3 மே 1741 அன்று, அனைத்துக் கப்பல்களிலும் அதிகளவில் அரிசி, வெடிமருந்து மற்றும் ஆயுதங்களுடனும், அதிகபட்ச துருப்புகளுடனும் குளச்சலை விட்டு தூத்துக்குடிக்கு காக்கர்ட் நகர்ந்தார். 250 ஐரோப்பியர்கள், 50 உள்நாட்டு வீரர்கள் மற்றும் 2 கொடி வீரர்கள் ஆகியோருடன் குளச்சலில் ரிசித்தல் தங்கியிருந்தார்.*

*இந்நிலையில், மீண்டும் ஆங்கிலேயரிடமிருந்து ஆயுதங்களும் வெடிபொருட்களும் திருவிதாங்கினருக்கு கிடைத்திருப்பதாக ஒற்றர்கள்மூலம் தைன் வான் கொல்லெனெசேவுக்கு தகவல் கிடைத்தது.[51] இது அவருக்கு கவலை அளித்திருக்கக்கூடும் என்றாலும், மேற்கத்திய ஆயுதங்கள் மூலம் மிகவும் எளிதாக குளச்சலை முற்றுகையிடவும், இன்னும் சரியான பாதுகாப்பு இல்லாத சூழ்நிலையில் அது அவர்களுக்கு சுலபமாக கைகூடவும் வாய்ப்புண்டு. குறிப்பாக, கோட்டை கட்டி முடிக்கப்படாத நிலையில் இருப்பதற்கு லெசுலோரன்ட் என்பவரை அவர் குற்றம் சாட்டினார்.*

*"...இந்த மனிதர் மிகவும் திறனற்ற மற்றும் கெடுதி மிகுந்த மனிதர் மட்டுமல்ல, அவர் திட்டங்களை வகுக்க முடியாதவராகவும், அவரால் காகிதத்தில் எழுதப்பட்டதை செயல்படுத்த முடியாதவராகவும் மற்றும் அவருடைய சுயத்தைப் பின்பற்றி, நேற்று அவர் கட்டியதை இன்று இடிக்கிற நிலைக்கு திடீரென மாறும் குணமுடையவராகவும் இருக்கிறார்".*[52]

குளச்சலில் இருந்து ரிசித்தல் அனுப்பிய இன்னொரு தகவலும் தைன் வான் கொல்லெனெசேவுக்கு அதிருப்தியை உருவாக்கியது. அவர், குளச்சல் தளபதியிடம், வீரர்கள் தங்கும் வீடாக தேவாலயத்தை மாற்றும்படியும், பொருட்களை வெளியிலுள்ள கொட்டகையில் வைக்கும்படியும் உத்தரவிட்டார். இதுதவிர, வெடிமருந்துகளை சேமித்து வைப்பதற்கான கட்டுமானத்திற்காக 70 மூடை சுண்ணாம்புப் பைகளையும் அவர் அனுப்பி வைத்தார். லெசுலோரன்ட், 140 மூடைகள் கோரியிருந்தார். ஆனால் கொச்சி தளபதி, அவரின் கோரிக்கையை கவனத்தில் எடுத்துக்கொண்டு, அவர் கேட்டதைவிட இரண்டு மடங்கு அதிகமாக ஏற்கனவே அனுப்பி இருந்ததால் அவரது கோரிக்கை மிகைபடுத்தப் பட்டதாக கருதினார்.[53]

மே 5 அன்று, காக்கர்ட் தூத்துக்குடியை வந்தடைந்தார். இரண்டு வாரங்களுக்கு முன்பாக புயல் வந்தபோது, 'காச்திரிகம்' கப்பல் தலைவர் டி கீரே என்பவர் அவருடைய உத்தரவை மதிக்காமலும், உதிரி நங்கூரங்களை 'சோட்டலிங்கெர்க்' கப்பலுக்குக் கொடுத்து உதவாமலும் இருந்தது குறித்து உடனடியாக ஓர் புகார் மனுவை அனுப்பினார்.[54] அவரது தூத்துக்குடி பயணத்தைக் குறித்தும் தைன் வான் கொல்லெனெசேவுக்கு தகவல் கொடுத்தார். குளச்சலில் கட்டுமானம் நல்ல முன்னேற்றம் அடைந்திருப்பதாகவும் கடிதம் எழுதினார். இப்பொழுது, நான்கு அரண்களில் நான்கு பீரங்கிகள் பொருத்தப்பட்டு விட்டதாகவும், எதிர் தாக்குதலை தாங்கிக்கொள்ளும் வகையில் பாதுகாப்புக்கு கோட்டை பலமாகத் தோன்றுவதாகவும், வெடிமருந்துகளை சேமித்து வைப்பதற்கான கிட்டங்கி தாயராகி விட்டதாகவும், இருப்பினும் அதில் கூரை

இல்லாமலே இருப்பது குறைபாடாக இருப்பதாகவும் குறிப்பிட்டிருந்தார்.[55] தைன் வான் கொல்லெனெசேவுக்கு காக்கர்ட் எழுதிய கடிதம் கிடைப்பதற்கு முன்பாக, அவர் வேறொரு அபாயத் தகவலை சிலோன் ஆளுநர் மவுரித் புரூனிங் என்பவரிடமிருந்து பெற்றிருந்தார்.[56] அந்த கடிதம் தைன் வான் கொல்லெனெசேவுக்கு தெரிவித்திருந்தது என்னவென்றால், மலபார் கடற்கரையில் இருந்து தன்னுடைய படைகளை முற்றிலுமாக விலக்கிக் கொள்ள அனுமதிக்க வேண்டும் என்கிற வேண்டுகோளை காக்கர்ட் வைத்திருந்தார்.[57] அதற்குரிய காரணம் என்னவென்றால், பெரும்பாலும் தூத்துக்குடியில் உள்ள நிலைமை குளச்சலில் இருந்ததைவிட சிறப்பானதாக அமையவில்லை. அங்குள்ள துருப்புகள் தேவாலயத்திலும், சிலர் மரக் கொட்டகைகளிலும் தங்கி இருந்தனர்.

உண்மையாகவே, காக்கர்ட்மீது தைன் வான் கொல்லெனெசே கோபமடைந்தார். காக்கர்ட் ஏன் உத்தரவுகளை மதிக்காமலும், கொல்லத்திற்கு பதிலாக தூத்துக்குடிக்கு சென்றார் என்பதனை அவரால் புரிந்துகொள்ள இயலவில்லை.[58] அவரது கருத்துப்படி, காக்கர்ட் புறப்பட்டுச் சென்றது குளச்சலை முற்றுகை இடுவதற்கு திருவிதாங்கூரை ஊக்கப்படுத்திய செயலாகும். உதவிப்படை வேண்டி குளச்சலில் இருந்து அவசர கோரிக்கையினை கொச்சிக் கோட்டை பெற்றபோது இன்னும் அச்சமடைந்தனர். கொச்சியிலிருந்து எந்தவொரு படையையும் அனுப்ப முடியாமல் போனதிற்கு, கோட்டையிலுள்ள படைகள் பலகீனமாக இருந்த நிலையில்தான் 500 அல்லது 600 கொச்சி குடிமக்களுக்கு பாதுகாப்புப் பணிக்கான ஆயுதங்கள் வழங்கப்பட்டிருந்தன.[59] அதனால், கன்னியாகுமரி வழியாக குளச்சலுக்கு உடனடியாக திரும்பிச் செல்லும்படி தைன் வான் கொல்லெனெசே காக்கர்ட்க்கு உத்தரவு பிறப்பித்தார்.[60]

காக்கர்ட் குளச்சலை விட்டு கிளம்பியவுடனே, குளச்சலை முற்றுகையிடுவதற்கு வேண்டி இரண்டு பெரிய பீரங்கிகள், வாகனங்கள் மற்றும் ஏணிகள் ஆகியவற்றை திருவனந்தபுரத்தில் இருந்து கொண்டுவர மார்த்தாண்டவர்மா உத்தரவு பிறப்பித்தார்.[61] ஆனால் தீவிர முற்றுகை மே 27,

1741 அன்று துவங்கியது. அன்றைய தினம், பருவமழை துவங்குவதற்கு முன்பாக, திருவட்டாறு சிறி ஆதி கேசவ சுவாமி (விசுணு) கோவிலுக்கு மார்த்தாண்ட வர்மா வருகை புரிந்தார். கூட்டாளிகளுக்கு எதிரானப் போரில் வெற்றிபெற வேண்டுமென ஆதி கேசவ சுவாமியிடம் அவர் வேண்டி மன்றாடினார்.[62]

சூன் 6 அன்று, டச்சுப் படையில் படைவீரர்களாய் பணியாற்றிவிட்டு ஓடுகாலியாய் ஓடி வந்தவர்களும், ஆங்கிலேய வீரர்களும் இணைந்து டச்சுமீது பலமான பீரங்கித் தாக்குதலை நடத்தினர். டச்சுவினர் பகிரங்கமாகவே, திருவிதாங்கூருக்கு ஆதரவு அளிப்பதாக ஆங்கிலேயர்கள்மீது குற்றம் சாட்டியபோது, திருவிதாங்கூருக்கு பணி செய்பவர்கள் எல்லாம் ஓடுகாலிகளாக தப்பி ஓடியவர்கள் என ஆங்கிலேயர்களின் அஞ்சுதெங்கு மையம் கூறியது. திருவிதாங்கூருக்காக பணிசெய்கிற ஐரோப்பிய கூலிப்படைகள் அனைவருக்கும் கட்டளை இடுபவராக டச்சு கிழக்கிந்திய நிறுவனத்தை விட்டு ஓடுகாலியாய் தப்பியோடிய செர்மனியர் காரல் ஆகத்து டியூவன்சாட் இருந்து வந்தார்.[63] பீரங்கிகள், கற்களால் நிரப்பப்பட்ட சட்டிகள், தடுப்புத் தட்டுகள், கோட்டை சுவர் வழியாக சுடக்கூடிய சிறு துப்பாக்கிகள் ஆகியவைகள் மூலம் ஐரோப்பியப் பாணியில் முன்னெடுத்து செல்லப்பட்ட குளச்சல் முற்றுகையை அவர் மேற்பார்வையிட்டார்.[64] தைன் வான் கொல்லெனெசே கருத்துப்படி, ஓடுகாலியாய் தப்பி ஓடியவர்களின் உதவியின்றி இப்படிப்பட்ட முற்றுகையை திருவிதாங்கூர் மன்னரால் நடத்த முடியாது என்பது மட்டுமின்றி, அவர்கள், திருவிதாங்கூர் துருப்புகளுக்கு மட்டும் கட்டளையிடுவது மட்டுமில்லாமல், வீரர்கள் தப்பியோட நினைத்தால் அவர்களுக்கு மரணத் தண்டனை வழங்கும் அதிகாரத்தையும் பெற்றிருந்தனர். ஏன் திருவிதாங்கூர், குளச்சல் முற்றுகையை நீடித்தது என்பது இங்கு விளக்கப்பட்டாலும் சூலை மாதத்திற்குள் ஆயிரக்கணக்கான வீரர்கள் ஏற்கனவே கொல்லப்பட்டு இருந்தனர்.[65]

திருவிதாங்கூருக்கு ஆங்கிலேயர்கள் வெடி மருந்துகளை வழங்கியதுடன், மேலும் சில பீரங்கிகளை மார்த்தாண்ட வர்மாவுக்கு கொடுத்தது மட்டுமின்றி, அதனோடு அதனை

*இயக்கத் தெரிந்த நான்கு ஏட்டுகளையும் அனுப்பி வைத்தனர்.*[66] *டச்சுப் படையிலிருந்து ஓடுகாலியாய் தப்பியோடிய டியூவன்சாட் என்பவருக்கு ஆங்கிலேயர்கள் பிரியமான வரவேற்பு கொடுத்தது குறித்து டச்சு குற்றம் சாட்டியது. அவர்களின் கூற்றுப்படி, அஞ்சுதெங்கின் ஆங்கிலத் தலைமை அதிகாரி சார்லசு ஒயிட்கில் என்பவர் அனைத்து வகையான கௌரவத்துடனும் மரியாதையுடனும் அவரை வரவேற்றார்.*[67] *டச்சுவினர் மேலும் வைத்த குற்றச்சாட்டு என்னவென்றால், அஞ்சுதெங்கு வழியாக டச்சுக்காரர்கள் சுதந்திரமாக கடந்து செல்வதற்கு ஆங்கிலேயர்கள் அனுமதி மறுத்தனர் என்பதாகும். அதற்கு ஆங்கிலேயர்கள் அவர்கள் சார்பில் டச்சுவினர்மீது வைத்த குற்றச்சாட்டு யாதெனில், எட்டுவீட்டுப் பிள்ளைமார்களை மீண்டும் உயர்நிலைக்குக் கொண்டுவருவதை தேவையாகக்கொண்டு, இதற்கு முன்பாக ஒவ்வொரு மாதமும் ஐந்து கலியன் பணத்திற்காக (சுமார் 30 ரூபாய்) ஒரு வீட்டை இடத்தறயில் அவர்கள் வாடகைக்கு எடுத்தனர்.*[68] *இதுதவிர, திருவிதாங்கூரில் ஒரு துணை அரசாட்சியை உருவாக்க டச்சு விரும்புகிறது என்றும் குற்றம் சாட்டினர். டியூவன்சாட் என்பவருக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டதை அவர்கள் மறுத்ததோடு, டச்சுவினர் சுதந்திரமாக கடந்து செல்வதனை அவர்கள் ஏற்றுக்கொண்டால் திருவிதாங்கூர் உடனான அவர்களின் நல்லுறவைப் பாதிக்கும் எனவும் கூறினர்.*[69] *ஆங்கிலேயர்கள் தங்களது ஆதரவினை திருவிதாங்கூருக்கு தொடர்ந்து அளிக்கும் வகையில் மார்த்தாண்ட வர்மாவுக்கு மூன்று கப்பல்களில் வெடி மருந்துகளையும், படைத் தளவாடங்களையும் அனுப்பி வைத்தனர்.*[70] *அவர்களின் உதவிக்கு கைமாறாக, அஞ்சுதெங்கிற்கும் தேங்காப் பட்டணத்திற்கும் இடையில் இரண்டு கோட்டைகள் கட்டிக்கொள்ள ஆங்கிலேயருக்கு மன்னர் வாக்குறுதி அளித்தார்.*[71]

*சூன் மாத நடுவில், குளச்சலை கைத்துப்பாக்கியால் சுடும் தூரத்தில் திருவிதாங்கூர் படைகள் முன்னேறி நின்றன. டச்சுப் பாதுகாப்புப் படையினர், போதியளவு சேதத்தை திருவிதாங்கூர் இராணுவத்திற்கு ஏற்படுத்தி இருந்தபோதும் டச்சுப் படை நம்பிக்கையற்ற நிலையிலே இப்பொழுது*

இருந்தது.[72] சூன் 25–இல், கொச்சிக்கு ரிசித்தல் எழுதிய கடிதத்தில், திருவிதாங்கினர் பீரங்கி கொத்தளங்களை கடற்கரையில் எழுப்பியுள்ளதால் அத்தியாவசியப் பொருட்களும், வெடிப் பொருட்களும் கடலோரம் வழியாக குளச்சலுக்கு எடுத்துச் செல்வது கடினமாகவே இருக்கும். மேலும், திருவிதாங்கூர் பீரங்கிப் படை குறிப்பட்ட அளவுக்கு முன்னேறிவிட்டதால் ரிசித்தல் கூற்றுப்படி கிணற்றிலிருந்து கொஞ்சம் தண்ணீர் எடுப்பது என்பதுகூட ஒருவரின் வாழ்க்கையை இழப்பதற்காக பணயம் வைப்பதாகவே அமையும். அவர் நம்பியது என்னவென்றால், இதற்கு முன்னர் எந்தவொரு இந்திய மன்னரும் மரபுவழியாகவோ, உறுதியுடனோ ஐரோப்பியரின் கோட்டையை முற்றுகையிட முடிந்ததில்லை.[73] திருவிதாங்கூரினர் கட்டிய கட்டுமானங்கள் வேகமாக நடந்தன என்பதனை பின்னாளில் கண்ணால்கண்ட நேரடி சாட்சி எழுதியதாவது:

> “அது அதிசயமாக இருந்ததற்கு, அவ்வளவு வேகமாக அந்த பீரங்கி கொத்தளங்களை எதிரிகள் கடற்கரையில் எழுப்பியிருந்தனர். ஒருநாள் காலையில் அவர்கள் திடீரென கடற்கரையில் தோன்றினர். எங்களுடைய கோட்டையின் தென்பகுதி மற்றும் கிழக்குப்பகுதி ஆகிய இருபுறங்களிலிருந்தும் நாங்கள் சரணடையும் வகையில் எதிரிகள் பீரங்கிகளை சரியான திசையில் வைத்தனர். எங்களை அதிக கவலைக்கு உட்படுத்தியது என்னவென்றால், அவர்கள் குளச்சலை நோக்கி முன்னேறி, எங்களது குரல் வளையை நெரிக்கும் வகையில் உத்தேசமாக 20,000 வீரர்களால் நாங்கள் மெல்லமெல்ல சூழப்பட்டோம்”.[74]

சூலை 19–இல், தூத்துக்குடியில் இருந்த போர்க் குழுவானது, அவர்களிடம் மார்ச் மாதத்தில் தேசிங்கநாடு கேட்டுக் கொண்டதன்பேரில் இரணியல் மற்றும் கல்குளம் ஆகிய திருவிதாங்கூர் கோட்டைகளை தாக்குவதில் இருந்து விலகிக்கொள்ள முடிவு செய்தது. அதற்குப்பதிலாக, தூத்துக்குடி இராணுவமானது கன்னியாகுமரிக்கு முன்கூட்டியே சென்று, அங்கிருந்து குளச்சலை விடுவிக்க வேண்டும்.[75] ஆனால், பருவமழை அந்த வெற்றியை

கடினமாக்கியது. தொடர் மழைப்பொழிவு காரணமாக சாலைகள் கிட்டத்தட்ட சேதமடைந்த நிலையில் உள்ளதால் கனரகப் பீரங்கிகளை சிலவேளைகளில் அவர்களின் வண்டிகளில் இருந்து இறக்கி, கூலிகளை வைத்து சுமந்து செல்ல வேண்டும் என்றாலும் தொற்று நோயாகிய பெரியம்மை நோயால் கூலிக்காரர்களின் எண்ணிக்கை அதிகளவில் குறைந்து இருந்தது.[76] அத்துடன் வீரர்களின் எண்ணிக்கையும், அத்தியாவசியப் பொருட்களும் குறைவாகவே இருந்தன. இந்த சிரமங்களை எல்லாம் தாங்கிக்கொண்டு 1 சூலை 1741 அன்று காக்கர்ட் கன்னியாகுமரி வந்தடைந்தார். உடனடியாக, எங்களை இலங்கைக்கு குறுகியப் பயணம் செய்ய அனுமதிக்க வேண்டுமென துணைநிலை படைத் தலைவர் லெத்தேனந்த் வில்லியம் கார்மேசு மற்றும் செயலாளர் வில்லியம் லூக்காசு ஆகியோரிடமிருந்து போர்க் குழுவுக்கு ஓர் விண்ணப்பம் வந்தது. மோசமான மனநிலைகளின் பிரதிபலிப்புகளாக இந்த விண்ணப்பங்கள் வீரர்கள் மத்தியில் உருவாகி இருந்தன என்பதற்கு, 1739–இல் இருந்து தொடர்ந்து நடைபெற்று வரும் திருவிதாங்கூர் மன்னருக்கு எதிரான போரும், சரியான ஊதியம் வழங்காததுமே இதற்குக் காரணமாகும். இப்படிப்பட்ட விளைவுகளால், கொழும்புவிலுள்ள டச்சு கிழக்கிந்திய நிறுவனத்திலுள்ள பணியாளர்களின் சிலரது மனைவிகள் அவர்களது சில அடிமைகளை விற்கவேண்டிய கட்டாயத்திற்கு தள்ளப்பட்டார்கள்.[77] கார்மேசு மற்றும் லூக்காசு ஆகியோரின் கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

சூலை 3 அல்லது 4 அன்று, படைத்தலைவர் சான் டிர்க் வான் டெர் புரூகன் தலைமையின்கீழ் 131 வீரர்கள் தூத்துக்குடியிலிருந்து வந்து சேர்ந்தனர்.[78] 1741 சூலை மாத நடுவில் கன்னியாகுமரி வந்து சேர்ந்ததில் 549 வீரர்களில் 111 வீரர்கள் தீவிரமாக செயல்பட தகுதியற்றவர்களாக இருந்தனர்.[79] இரண்டு வருடங்களுக்கு முன்பாக, 1739–இல், மதுரையில் உள்நாட்டுப் போர் ஏற்பட்டபோது, அதனை சாதகமாகப் பயன்படுத்திய டச்சுவினர் கன்னியாகுமரியில் ஒரு தொழிற்சாலையை கட்டியிருந்தனர். துணித் தொழிற் சாலைகளுக்கு மையமான கோட்டாறு நகரத்திற்கு அருகில் கன்னியாகுமரி அமைந்திருந்ததால், அது அனுகூலமான முக்கியப் பகுதியாக இருந்தது.[80]

காக்கர்ட், கன்னியாகுமரியில் அவரது படைகள் அடையப்போகும் மிகுந்த சிரமங்களை முன்கூட்டியே அறிந்திருந்தார். அங்கே, உணவு, வெடிமருந்து மற்றும் குண்டுகள் ஆகியவை பற்றாக்குறையாக இருந்தன. அங்கு கூலிகளுக்கும் பெரும் பற்றாக்குறை இருந்தது. அவர்களில் பலர் பெரியம்மை நோயால் இறந்துவிட்டனர். இந்தியப் படை வீரர்கள் அங்கிருந்து விலகி ஓடவும் அதேநோய் காரணமாக அமைந்தது. கனரகப் பீரங்கிகளை தரைவழி போக்குவரத்தாகக் கொண்டுசெல்ல காளைகள் அல்லது கூலிகள் தேவைப்பட்ட நிலையில், இவை இரண்டிற்கும் தட்டுப்பாடு நிலவி வந்ததால் போர்த் தளவாடங்களை நகர்த்துவது கடினமாக இருந்தது.[81] இந்த பிரச்சனைகளுக்கு ஒரேயொரு தீர்வாக இருந்தது யாதெனில், தங்களுடைய சொந்த அத்தியாவசியப் பொருட்களையும், வெடிப் பொருட்களையும் வலுக் கட்டாயமாக சுமந்துசெல்ல டச்சு வீரர்களை நிர்பந்திக்க வேண்டும். இருப்பினும், இது நல்லதொரு யோசனையல்ல என காக்கர்ட் உணர்ந்தார். அவர் கொழும்புவில் இருந்த தலைமை அதிகாரிகளுக்கு இவ்வாறாக எழுதினார்:

> "பெரும்பாலான பகுதிகளைச் சார்ந்த கடலோடிகள் அனைவரும் வாலிபர்களாக இருப்பினும், அவர்கள் உடல்நிலை மோசமான நிலையில் இருப்பதால், அதிகபட்சமாக நான்கு ஆண்கள் சேர்ந்தால்தான் ஒரு பெட்டி படைத் தளவாடங்களை அல்லது பீப்பாய் வெடி மருந்துகளை சுமந்து செல்ல முடியும்".[82]

ரிசித்தல் காக்கர்ட்விடம் தொடர்ந்து உதவி கேட்டுக்கொண்டே இருந்தார். வலுவூட்டக்கூடிய வகையில் அவருக்கு 200 அல்லது 300 வீரர்கள் மற்றும் புதிதாக குண்டுகள், காகிதம் (தோட்டாக்களுக்காக), வெடி மருந்து ஆகியவை தேவையாக இருந்தன. ஆனால், இந்த கோரிக்கை சாத்தியமுள்ளதாக இருக்கவில்லை. ரிசித்தல் காக்கர்ட்விடம், அவரின் கைவசமுள்ள வெடி மருந்துகளின் இருப்பைப் பொறுத்து, முற்றுகை இடுபவர்களை குறிபார்த்து சுடும்படி அறிவுரை வழங்கினார். இந்த அறிவுரையைப் பொறுத்த வரையில் ரிசித்தல் எரிச்சல் அடைந்தார். குளச்சல் வீரர்கள் தங்கள் சொந்த இன்பத்திற்காக திருவிதாங்கூரினரை நோக்கி

*சுடுவதன் மூலம் தங்களிடம் போதுமான அளவு பீரங்கிப் படைகளையும், வெடிப் பொருட்களையும் கொண்டிருப் பதற்கான மகிழ்ச்சியை வெளிப்படுத்தி கொண்டிருப்பதாக காக்கர்ட் நினைக்கிறார் போலும் என ரிசித்தல் ஏளனமாக பதிலளித்தார்.*[83]

*சூலை 15, குளச்சலில் மறைத்து வைத்திருந்த இரண்டு கண்ணி வெடிகளை திருவிதாங்கூரினர் வெடிக்கச் செய்த நிலையில், அதன்பின்பாக நடைபெற்ற தாக்குதல்களை டச்சுவினர் முறியடித்தனர். இத்தாக்குதல், எச்சரிக்கை கொள்வதற்குப் போதுமானதாக இருந்ததால் குளச்சல் போர்க் குழுவானது மொழிபெயர்ப்பாளர் டூபூயித்தை கன்னியாகுமரிக்கு நேரடியாக அனுப்பி, அங்கிருந்து உதவிபெற்று வர முடிவு செய்தது. கோட்டைகளுக்கு இடையே தபால் சேவைக்கு பயன்படுத்தப்படும் சிறிய கப்பலில் முக்குவர் படகோட்டி மற்றும் படைத்துறை சிற்றலுவலர் ஆகியோருடன் அவர் பயணம் மேற்கொண்டார். அந்த முக்குவரின் துரோகத்தால் இந்த கப்பல் கடற்கரையிலேயே உடைந்தது. மொழிபெயர்ப்பாளர் மற்றும் படைத்துறை சிற்றலுவலர் ஆகியோர் கைதிகளாக திருவிதாங்கூர் வீரர்களால் சிறைபிடிக்கப்பட்டனர்.*[84]

*டூபூயித் சிறை பிடிக்கப்பட்டார் என்கிற செய்தி கன்னியாகுமரியில் பெரும் பதட்டத்தை ஏற்படுத்த காரணமாக அமைந்தது. இதன் காரணமாக, கன்னியாகுமரி போர்க் குழுவானது குளச்சலில் பெரியதொரு தேவை இருக்கிறது என்கிற முடிவுக்கு வந்தது. கொச்சியில் இருந்து எந்தவொரு உதவியும் கிடைக்கவில்லை. தைன் வான் கொல்லெனெசேவிடம் இருந்து ஆயுதங்கள் மற்றும் அத்தியாவசியப் பொருட்களுக்குப் பதிலாக கொல்லெனெ சேவிடம் இருந்து கன்னியாகுமரி போர்க்குழு ஒரு கடிதத்தைப் பெற்றது. அதில், ஆயுதங்களும் அத்தியாவசியப் பொருட்களும் ஒதுக்கீடு செய்தால், கொச்சியிலே அவர்களுக்கும் அதற்கான தட்டுப்பாடு நிலவும் என்று எழுதியிருந்தார். குளச்சல் வேண்டுகோளுக்கு ஏற்ப 1663 முதல் 1668 வரையிலான பழைய சம்பள விவரக் கட்டுகளை, அதுவரையும் கரப்பான் பூச்சிகளுக்கு உணவாகியிருந்த 2500 தாள்களை அனுப்பி*

வைத்தார்.[85] மோசமான சூழ்நிலையில் இருந்த குளச்சல் காவற்படை குறித்தும், அதற்காக எதுவும் செய்ய முடியாத நிலை குறித்தும் அறிந்திருந்த காக்கர்ட்வுக்கு குளச்சலில் இருந்ததைவிட அவருடைய இராணுவத்தில் 100 வீரர்களே அதிகபடியாக இருந்தனர் என்றாலும், அவருக்கு உணவுப் பொருட்கள் மற்றும் அத்தியாவசியப் பொருட்கள் ஆகிய இரண்டிற்கும் தட்டுப்பாடு நிலவி வந்தது. குளச்சலை சுற்றி நிற்கும் 12,000 முதல் 15,000 வரையிலான திருவிதாங்கூர் வீரர்களுக்கு இணையாக அவரது இராணுவத்தால் நிற்க முடியாது.[86]

27 சூலை 1741 அன்று, ஆரால்வாய்மொழி மலையிலிருந்து கன்னியாகுமரிக்கு வடக்காக கட்டப்பட்டிருந்த திருவிதாங்கூர் அரண் நோக்கி 150 ஐரோப்பியர்களை உள்ளடக்கிய 420 டச்சு இராணுவத்தினர் புறப்பட்டுச் சென்றனர். ஆரால்வாய்மொழி அரணானது பெரிய சுவராலும், தடினமான உயரமான இரும்பு வேலிகளாலும், அதன்மீது பல பீரங்கிகளும் நிறுவப்பட்டிருந்தன.[87] அரணை நோக்கி டச்சுவினர் நெருங்கி வருவதனை அறிந்தவுடன் திருவிதாங்கினர் தொடர்ந்து அவர்களுடைய முரசுகளை அடித்தும், கொம்பாலான ஊதுகுழலில் சத்தத்தை எழுப்பிய வண்ணமாய் இருந்தனர்.[88] இந்த எச்சரிக்கைக்குப் பிறகு, டச்சுவினரின் துப்பாக்கி ஒன்று தவறுதலாக வெடித்துவிட, அதற்கு திருவிதாங்கூர் வீரர்கள் பதிலடி கொடுத்தனர். மேற்கொண்டு சண்டை நிகழாமல் இருக்கவும், தாக்குதலில் இருந்து பலருடைய உயிரிழப்பை தவிர்க்கவும் வேண்டி, காக்கர்ட் அவருடைய படை வீரர்களை பின்வாங்க உத்தரவிட்டார். அவர்களை தாக்குவதற்கு, போதியளவில் போர் வீரர்கள் இருக்கவில்லை. இருப்பினும், இந்த முடிவுக்கு கன்னியாகுமரி போர்க்குழு உறுப்பினர்கள் பிரான்சீசு டி'கேனின் மற்றும் கென்டிரிக் வென்டலின் கோலர் ஆகியோர் ஆதரவு அளிக்கவில்லை.[89] அவர்கள், திருவிதாங்கூர் முகாமைச் சார்ந்த செட்டியார் ஒருவரிடம் கேட்டறிந்ததில், குளச்சல் முற்றுகையின்போது மன்னரின் தலைமை நாயர்களில் ஒருவர் கொல்லப்பட்டதாக அவர்களிடம் சொன்னார். மேலும், இரண்டாவது இளவரசர் காயம் அடைந்ததாகவும் மற்றும் நோய்களால் திருவிதாங்கூர் படைகளின் எண்ணிக்கை

குறைந்து விட்டதாகவும் கூறினார். அதனால், கன்னியாகுமரியின் முதன்மை பொறுப்பாளர்கள் பிரான்சீசு டி'கேனின் மற்றும் கென்டிரிக் வென்டலின் கோலர் ஆகியோர் திருவிதாங்கூரை மேற்கொண்டு தாக்குவதில் எந்தவித பலனும் ஏற்படப்போவதில்லை என்ற போர்க் குழுவின் தீர்மானத்தில் கையெழுத்திட மறுத்துவிட்டனர். அடுத்து என்ன செய்வதென காக்கர்ட்க்கு தெரியவில்லை. நம்பிக்கையற்ற நிலையில் அவர் கொழும்புவுக்கு கடிதம் எழுதினார்:

> "ஓர் போர்வீரன், விவேகமற்ற செயலாலோ அல்லது கோழைத்தனத்தாலோ அவனின் நற்பெயரை இழக்கலாம். அவற்றில் சிறந்ததை அவன்தான் தேர்வு செய்ய வேண்டும். இந்த சூழ்நிலையில் அவன் எதைத் தேர்வு செய்தாலும், பின்னாளில் அவனுடைய செயலுக்காக எப்பொழுதுமே அவன் தூற்றப்படுவான்".[90]

தைன் வான் கொல்லெனெசேவுக்கு காக்கர்ட் அனுப்பியிருந்த அறிக்கையில் காக்கர்ட்வின் தடுமாற்றம் பிரதிபலித்தது. தெளிவற்ற அறிக்கையால் தைன் வான் கொல்லெனெசேவுக்கு அவர்மீது சந்தேகத்தை ஏற்படுத்தியது.[91]

இந்நிலையில், 28 சூலை அன்று, குளச்சல் கோட்டையின்மீது திருவிதாங்கூரினர் பெரியளவில் மீண்டும் தாக்குதலை நடத்தினர். இது முறியடிக்கப்பட்டது மட்டுமின்றி திருவிதாங்கூரினர் பலர் மரணத்தைத் தழுவினர். அவர்களின் மரித்த உடல்கள் கோட்டையின் அகழிகளில் நிரம்பியிருந்தன.[92] திருவிதாங்கூரினர் இப்பொழுது கண்ணி வெடிகளையும் மட்டுமின்றி கோட்டையை எரிக்கும் வகையில் எரிந்து உருகும் காகித ஏவுகணைகளையும் பயன்படுத்தினர்.[93] டச்சுப் படை வீரர்களின் நிலைமை மோசமடைந்து வந்தது. தங்களை வலுப்படுத்தும் வகையில் உதவிகள் பெறப்படவில்லை என்றால் கோட்டையை தக்கவைத்துக்கொள்ள முடியாது என்றும், எட்டு நாட்களுக்குள் சரணடைய வேண்டிய நிலைமை ஏற்படுமெனவும் காக்கர்ட்வுக்கு ரிசித்தல் கடிதம் எழுதினார். மே மாதத்தில், தூத்துக்குடிக்கு காக்கர்ட் கிளம்பிச் சென்ற நாளிலிருந்து ஏற்பட்டுள்ள குறிப்பிட்ட சிரமங்களுக்கு காக்கர்ட்டை ரிசித்தல் குற்றம் சாட்டினார். குளச்சல் தளபதி

இன்னும் கூடுதலாக, கடவுளுக்கும் மனசாட்சிக்கும் ஏற்றவகையில் குளச்சலை சரணடைவதில் இருந்து முடிந்தளவு தடுக்க முயன்றதாகவும், அதன்மூலம் படாவியா உயர்மட்டக் குழுவின் முன்பாக தன்னை பயமின்றி நியாயப்படுத்த முடியுமெனவும் கருதினார்.[94]

டச்சுவினரின் தொடர் தாக்குதல்கள் திருவிதாங்கூர் படைகளை வலுவிழக்கச் செய்தன. இதைத்தவிர, பெரியம்மை நோயின் தாக்கமும் அதிகமாகயிருந்தது. பல வீரர்கள் தப்பியோடிய நிலையில், உத்தரவிடும் அதிகாரத்தைக் கொண்டிருந்த ஓடுகாலி ஐரோப்பியர்களிடம் அவர்கள் பிடிபட்டபோது, அவர்கள் கடுமையாக தண்டிக்கப்பட்ட நிலையிலும் பல வீரர்கள் தப்பி ஓடினர். சூலை இறுதியில், குளச்சலின் தெற்கிலுள்ள கொட்டில்பாடு கிராமத்திலிருந்து படைகளை பின்வாங்க உத்தரவிட்ட மார்த்தாண்ட வர்மா, சிறிய எண்ணிக்கையிலான துருப்புகளை மட்டுமே விட்டுச் சென்றார்.[95] திருவிதாங்கூர் பின்வாங்கியதனைக் கேள்விப்பட்ட டச்சுவின் கொச்சி தலைமையகம், அய்ரூரில் முகாமிட்டிருந்த படைகளிடமும் மற்றும் கன்னியாகுமரியில் முகாமிட்டிருந்த படைகளிடம் கடைசிகட்டத் தாக்குதலை நடத்தி குளச்சலை விடுவிக்க உத்தரவிட்டது. பருவமழையின் காரணமாக, ஆறுகள் பொங்கி வழிந்ததாலும் சாலையில் கடந்துசெல்ல முடியாத நிலை ஏற்பட்டதாலும் ஆய்ரூரில் உள்ள கொலாண்டியோ கோட்டைத் தளபதியால் குளச்சலுக்கு வந்துசேர இயலவில்லை. கன்னியாகுமரி போர்க்குழு, சூலை 31–இல், கடல் வழியாகச் சென்று குளச்சலை விடுவிக்க தீர்மானித்தது. காக்கர்ட், கடல் வழியாக குளச்சலை விடுவிப்பதற்கு தோணி உரிமையாளரிடம் 100 ரிச் டாலர்களை (தோராயமாக 108 ரூபாய்களை) அல்லது இந்திய மீன்பிடி படகுகளுக்கு வழங்கிட முடிவு செய்தார்.[97] வடமேற்கு காற்றால் அத்தகைய மீட்பு சாத்தியமற்றதாய் இருந்தது. தோணி உரிமையாளர்களின் தலைவன் காக்கர்ட்விடம், கூடுதலாக 10,000 ரிச் டாலர்களை தாங்கள் வழங்கினாலும் அவர்கள் அதனை ஏற்கமாட்டார்கள் என்றார்.[98]

ஆகத்து 2 அன்று, குளச்சலில் தங்கியிருந்த சேசு சபை பாதிரியார் அளித்த தகவல்படி, தளபதி ரிசித்தல், அவருடைய

தலையில் கடுமையாக காயமுற்ற நிலையில் விரைவிலே மரணமடைந்துவிட்டார். அவர் மரணப்படுக்கையில் இருக்கும்போது, அடால்ஃப் சுவார்ட் என்பவரைப் பொறுப்பாக்கி கோட்டையின் சாவிகளை ஒப்படைத்துவிட்டு, அவருக்கு அறிவுரை வழங்கி, கோட்டையைக் காப்பதில் பெருமையும் நேர்மையும் மிக்க வீரராக இருக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்.[99] டச்சுப் படையினர் சோர்வுற்று, நம்பிக்கை இழந்த நிலையில் இருந்தனர். ஆகத்து 3 அன்று, அவர்களுடைய தளபதியின் அடக்கத்திற்குப் பின்பாக அவர்கள் சாராயத்தை குடித்துவிட்டு, கோட்டைச் சுவர்களில் ஏறி பாடவும் துள்ளவும் செய்தனர். கோட்டையின் வெளியேயுள்ள திருவிதாங்கூர் படைகளின் கவனத்தை கவரும்பொருட்டு அவர்கள் தொப்பிகளை அசைத்து சரணடைவதைக் குறிக்கும் வகையில் சைகைகளைக் காட்டினர். மார்த்தாண்ட வர்மாவால் விட்டுச்சென்ற சிறு துருப்புகள் குடிகாரர்களைப் பார்த்து, அவர்களைத் தவறாகப் புரிந்துகொண்டனர்.[100] கன்னியாகுமரி படைகளின் உதவியால் டச்சுவினர் நிம்மதி அடைந்திருப்பதாகவும், அதன் உதவியை அவர்கள் கொண்டாடுவதாகவும் அவர்கள் நினைத்துக் கொண்டனர். அதன்விளைவாக, அவர்கள் பின்வாங்க நினைத்தனர்.

அவர்கள் பின்வாங்குவதற்கு முன்பாக, டச்சு வீரர்களின் விசித்திரமான நடத்தை குறித்து விசாரிக்க மார்த்தாண்டவர்மா கோட்டைக்கு வருகை புரிந்தார். அவர் டச்சுவினரிடம், கோட்டையிலிருந்து கீழே இறங்கி வாருங்கள், உங்களோடு பேசுகிறேன் என்றார். டச்சு வீரர்கள் 31 பேர் சுவரிலிருந்து கயிறுகள் வழியாக கீழே இறங்கி நேராக திருவிதாங்கூர் முகாமிற்கு சென்றனர். அவருடைய கூடாரத்தில் அவர்கள் இருந்தபோது, மார்த்தாண்டவர்மா பெரிதும் அவர்களை நம்பாமல், அவர்களிடம் உங்களுடைய அதிகாரிகள் எங்கே என்று கேட்டார். அதற்கு வீரர்கள், அங்கே அதிகாரிகள் எவரும் இல்லை என்றனர். அதன்விளைவாக 3 ஆகத்து 1741 அன்று, திருவிதாங்கூர் மன்னருக்கும் இந்த 31 வீரர்களுக்கும் இடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. இந்த ஒப்பந்தத்தின்படி அனைத்துவகை ஆயுதங்களுடன் சுதந்திரமாக

கன்னியாகுமரிக்கு அணிவகுத்துச் செல்ல டச்சுவினர் அனுமதிக்கப்பட்டனர்.[101]

குளச்சலில் நடைபெற்ற துயரத்தினை கன்னியாகுமரி டச்சுவினர் உடனடியாக அறிந்திருக்கவில்லை. திருவிதாங்கூர் எல்கையிலுள்ள கன்னியாகுமரிக்கும் குளச்சலுக்கும் இடையில் தாக்குதல் நடத்த வேண்டுமென ஆகத்து மாதத் துவக்கத்தில் தைன் வான் கொல்லெனெசேவிடம் இருந்து காக்கர்ட் உத்தரவினைப் பெற்றிருந்தார். அவரது கூற்றுப்படி, மதுரை படையினரிடமிருந்து பாதுகாக்கும் பொருட்டு கட்டப்பட்ட அந்த அரணில் முறையான காவல் இல்லை. அவருடைய கூடுதலான கருத்து என்னவென்றால், குளச்சலை ஒருபோதும் கைப்பற்ற முடியாது என்கிற விரக்தியில் திருவிதாங்கூர் மன்னர் இருக்கிறார். திருவிதாங்கூர் முகாம்களில் வீரர்களிடையே விரக்தி நிலவுகிறது.[102] அதைப்போன்ற ஒரு தாக்குதல் 27 சூலையில் நடைபெற்று தோல்வியில் முடிந்ததை தைன் வான் கொல்லெனெசே அறிந்திருக்கவில்லை. இருப்பினும், திருவிதாங்கூர் அரண்மீது புதிய தாக்குதலை நடத்த போர்க் குழுவானது முடிவு செய்த நிலையில், எதிரிகளை உளவு பார்க்க ஒற்றனை வெளியே அனுப்பியது. 5 ஆகத்து 1941 அன்று ஒற்றன் கொடுத்த அறிக்கையின்படி, மதுரை நாடு அல்லது பாண்டிய நாட்டு மறவர்களின் குதிரைப்படை, நாயர்கள், ஈழவர்கள் மற்றும் பரவன்கள் என அனைத்து சாதியிலிருந்தும் 300 வீரர்கள் அரணை பாதுகாக்கின்றனர். இருப்பினும், கோவளம் அரணைத் தாக்க ஒற்றன் பரிந்துரை செய்தான். திருவிதாங்கூரினரால் சரியாக பாதுகாக்கப்படாத மணக்குடியை, அதாவது கோவளம் வழியாக இலகுவாகத் தாக்க முடியுமென்றும். அங்கிருந்து சுசீந்திரம் திசையில் சாலையில் பயணிக்க முடியுமென்றும், பாதுகாப்பு அரண் மலையில் முடிவுறும் என்றும் அவன் சொன்னான்.[103] களிமண்ணால் அரண் அமைக்கப்பட்டுள்ளதால் புதர்களின் பின்னால் வீரர்கள் மறைந்து நிற்க முடியும். அதன்மூலம், டச்சுவினர் அதிக ஆபத்தின்றி தாக்குதல் நடத்த முடியுமெனவும், 12 பயணிகள் அங்கே இரவுநேர உணவு சமைத்துக் கொண்டிருப்பதனை பார்த்ததாகவும் சொன்னான்.[104] போர்க் குழுவினருடன் கார்ப்பரல் டேனியல்

எம்மர்ட் ஆலோசனை நடத்தினார். போருக்கு முன்பாக, திருவிதாங்கூர் அரணை பார்வையிடும் பொருட்டு அவர் வேட்டையாட சென்றார். ஒற்றன் கூறியதை உறுதிபடுத்திக் கொண்டார்.

ஆகத்து 3–இல், குளச்சலில் டச்சுப் படையினர் முழுவதுமாக சரணடையவில்லை. 31 டச்சு வீரர்களைப் பிடித்ததால் ஊக்கமடைந்த திருவிதாங்கூரினர் இரண்டுமடங்கு முயற்சி செய்து கோட்டையை கைப்பற்ற முயன்றனர். குளச்சலின் மேற்குப் பகுதியிலுள்ள அகழியை தேங்காய் ஓடுகளாலும், சுரைக்காய்களாலும், மண்ணாலும் இப்பொழுது அவர்கள் நிரப்பினார்கள். கோட்டைச் சுவரைவிட உயரமான காவற்கோபுரங்களை அவர்கள் உருவாக்கியதன் காரணமாக கோட்டைக்குள் இருக்கிற யாரையும் சுட்டு வீழ்த்த முடியும்.[105] இதைத்தவிர, கன்னியாகுமரியில் இருந்து தரைவழியாக டச்சுவினர் ஏதேனும் உதவிப் படையைப் பெற்றுக் கொள்கிறார்களா என்பதனை காவற்கோபுரங்கள் மூலம் கண்காணிக்கவும் முடியும்.

ஆகத்து 6 அன்று, டியூவன்சாட் கட்டளையின்கீழ் செயல்பட்ட திருவிதாங்கூரினர், புதிய முயற்சியாக கிழக்குப் பகுதியில் கண்ணிவெடிகளை வைத்து வலுப்படுத்திக் கொண்டனர் என சுவார்ட் அறிக்கை கூறுகிறது. அப்பொழுது, கன்னியாகுமரி மற்றும் தூத்துக்குடி ஆகிய முகாம்களிலிருந்து ஓடுகாலியாக வெளியேறிய 22 ஐரோப்பியர்கள் திருவிதாங்கூரில் சேவை செய்து வந்தனர். வெடிகுண்டுகளை வைத்து எப்படி குளச்சலை வெடிக்கச் செய்ய முடியும் என்பது குறித்து டியூவன்சாட் திருவிதாங்கூரினருக்கு விளக்கினார். மூன்று நாட்களுக்குப் பின்பாக ஆகத்து 9 அன்று கண்ணிவெடி வெடித்தது. தீன் வான் கொல்லெனேசே இவ்விளைவினை கீழ்காணும் வகையில் விவரித்தார்.

> “இந்தத் துரோகிகள், இந்தப் பணியை மோசமாகக் கற்றிருந்ததால் கண்ணிவெடிகள் மாறுபட்ட விளைவை ஏற்படுத்தியதன் காரணமாக அது கோட்டையை சேதப்படுத்தாமல் பல எதிரிகளை கொன்றது மட்டுமின்றி அவர்களுடைய அகழி சூழ்ந்த பாதுகாப்புப் பகுதிகளையும் சேதப்படுத்தியது”.[106]

அவர் கருதியது யாதெனில், தேவாலயத்தைத் தகர்ப்பதே அதன் முக்கிய நோக்கமாகும். இந்தவேளையில், திருவிதாங்கூரின் அரணை உடைத்து ஊடுருவவேண்டி கன்னியாகுமரியில் இருந்த டச்சுவினர் தொடர்ந்து முயற்சி செய்தனர். 7 ஆகத்து 1741 நள்ளிரவில் உத்தேசமாக 400 வீரர்கள் அணிவகுத்துச் சென்றனர். ஒற்றன் அறிவுறுத்தியபடி, அரணை தகர்க்க முடிவு செய்த அவர்கள், மலைக்கு நெருக்கமாக இருந்த அரணை நெருங்க முடிவு செய்தனர். கடும் மழையின் காரணமாக அவர்கள் பயன்படுத்த வேண்டிய சாலைகள் கடந்து செல்ல முடியாத நிலையில் இருந்ததால் டச்சுப் படைகளின் முன்னேற்றம் தாமதமானது. திட்டத்திற்கு மாறாக, கோவளம் அரணை சூரிய உதயத்திற்குப் பின்பாக அவர்கள் அடைந்தனர். அரண்கள் மிகவும் செங்குத்தாக இருந்ததால் வீரர்கள் ஏணிகளைப் பயன்படுத்த வேண்டியதாய் இருந்தது. இந்த எதிர்பாராத தாக்குதலால் திருவிதாங்கூர் வீரர்கள் அச்சுறுத்தலுக்கு உள்ளாகி, பெரியளவில் குழப்பமடைந்த நிலையில் கலைந்து ஓடினார்கள். அரணின் வாயில், பெரிய பூட்டினாலும் திருகாணியாலும் மூடப்பட்டிருந்ததால் வலுக்கட்டாயமாக திறக்கப்பட வேண்டியதாய் இருந்தது. அரணின் பின்னால் அமைந்திருந்த வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டன. எல்லா திசையிலும் கலைந்துசென்ற திருவிதாங்கூரினர் மலை அடிவாரத்தில் கூடிய பின்பாக பெரிய எண்ணிக்கையில் திரும்பி வந்தார்கள். திருவிதாங்கூர் அரணைக்குறித்து, ஒரு விரிவான அறிக்கையை காக்கர்ட் கொடுக்க வேண்டியதாய் இருந்தது. அவர்கள் கட்டியவை, ஐரோப்பிய கட்டிடக்கலைப் பாணியில் பாதுகாப்புக்கென கட்டுவதுபோன்று கட்டப்படவில்லை. எதிரிகளின் குண்டுகள் மற்றும் கையெறிக் குண்டுகள் இயற்கையாகவே அரண்களுக்குப் பின்னால் அமைந்துள்ள நீரால் நிரப்பபட்ட பள்ளத்தில் பெரும்பாலும் விழும்படி வடிவமைக்கப்பட்டிருந்ததால் அவை வெடிப்பதற்கு வாய்ப்பில்லை. இந்த அரண்கள், ஆங்கிலப் பொறியாளர்களின் உதவியால் கட்டப்பட்டிருக்க வேண்டுமென காக்கர்ட் கருதினார்.[107] ஐரோப்பியர்களின் கண்டுபிடிப்பு மற்றும் அறிவு ஆகியவற்றின் அடிப்படையில் திருவிதாங்கூரினர் சிக்காலான கோட்டை ஒன்றினை அமைக்க முடியும் என்பதனை எல்லா விதத்திலும் தெளிவுபடுத்துகிறது.

ஆகத்து 8 அன்று, அவருடைய அனைத்து அலுவலர்களையும் ஒன்றாக வரும்படி போர் குழுவினருக்கு காக்கர்ட் அழைப்பு விடுத்தார். அவர்களின் ஒட்டுமொத்தமான முடிவு என்னவென்றால், அவர்கள் வெற்றிகொள்ள வேண்டிய இலக்கு 60 கி.மீ தொலைவில் இருப்பதால், குளச்சலை நோக்கி மேலும் அணிவகுப்பது என்பது சாத்தியமற்றது. அதன் தொலைவு மிக நீண்டதாய் இருக்கிறது.[108] திருவிதாங்கூரின் அரணான கோவளம் கைப்பற்றப்பட்ட பின்பும், அங்கு எதிர்பாராத சிரமங்கள் இருப்பது மட்டுமின்றி, உணவும் ஆயுதங்களும் வழங்குதலில் ஏற்படும் சிரமங்களுடன், அதனைத் தக்கவைப்பதில் எந்தவித நன்மையையும் ஏற்படப் போவதில்லை எனக் காக்கர்ட்டும் அவருடைய அலுவலர்களும் கருதினர். ஆகவே, கன்னியாகுமரிக்கு பின்வாங்கி விடுவதென போர்க்குழு முடிவு செய்தது.[109] திருவிதாங்கூர் அரணான கோவளத்தைவிட்டு டச்சுவினர் வெளியேறியவுடனே திருவிதாங்கூரின் இரண்டாவது இளவரசர் பெரும் படையுடன் அங்கே தோன்றினார். அவர் விரைவாக அரணினை கைவசப்படுத்தி, களிமண்ணால் வாயற்கதவை அடைக்கும்படி உத்தரவிட்டார்.

ஆகத்து 9 பிற்பகல் 4 மணிக்கு, குளச்சலில் டச்சுக் கொடி மூன்றுதடவை உயர்ந்ததையும், அதைத்தொடர்ந்து பெரிய பீரங்கியால் சுடப்படுவதையும் குளச்சல் கடல் பாதையில் நின்றுகொண்டிருந்த, 'போர்கா' கப்பல் குழுவின் கடற்படை அதிகாரி சான் தியூனிசு பார்த்தார்.[110] இந்த சைகையைத் தொடர்ந்து மூன்றுமுறை பெரியளவில் வெடிச்சத்தம் ஏற்பட்டதன் விளைவாக அதன் அசைவுகள் அலையில் உணரப்பட்டதால் குளச்சல் பெரும் துன்பத்தில் இருகிறது என தியூனிசு முடிவு செய்தார். வெடிச்சத்தத்திற்குப் பின்பாக பெரும் புகைமூட்டம் கோட்டையிலிருந்து வெளியே எழுந்தது. என்ன நடந்தது? முக்கிய நிகழ்வுகளில் மிகவும் மதிப்புமிக்கவராய் கோட்டைக்குள்ளே இருந்த சான் கிறித்தோபால் கார்ட்மேன், அங்கிருந்து வெளியேறியவர் எழுதியது என்னவென்றால், பிற்பகல் நான்கு முதல் ஐந்து மணிக்குள் பீரங்கிக் குண்டு ஒன்று தேவாலயத்தில் இருந்த வெடிமருந்து கிடங்கைத் தாக்கியது. அங்கு மிகப்பெரிய

வெடிப்பு ஏற்பட்ட நிலையில் 600 பவுண்ட் வெடிமருந்துகள், பெரும்பாலும் அனைத்து துப்பாக்கிகளும், குண்டுகளும் வெடித்துச் சிதறின. போர் வீரர்களின் மரத்தாலான குடியிருப்பு எரிந்தது மட்டுமின்றி அனைத்து உணவு வகைகளும் அழிக்கப்பட்டன.[111] அதன்பின்பாக, திருவிதாங்கூரினர் 14 சிறியரக பீரங்கிகளால் கோட்டையை நோக்கி தாக்குதல் நடத்திய நிலையில், முதன்மை ஆலோசகரும் அமைச்சருமான இராமைய்யன் தளவாய் தலைமையிலான மறவர் படை கோட்டையைத் தாக்கியது.[112] அதற்கு, எதிர் தாக்குதல் நடக்குமென தியூனிசு நினைத்தபோதும், கடல் கொந்தளிப்பும் சூறைக் காற்றும் டச்சுக் கப்பலை கோட்டைக்கு அருகில் கொண்டு வருவதிலிருந்து தடுத்துவிட்டது. பெரும்பாலான குளச்சல் பகுதி தீக்கிரையாக்கப்பட்டது என்பது பின்னர் தெரிய வந்தது. கோட்டையின் உள்ளே இருந்த கிணறு பயன்படுத்த முடியாத அளவிற்கு மரித்தப் பிணங்களால் கெட்டுப் போயிருந்தது. மரித்த சடலங்களிலிருந்து பயங்கரமான துர்நாற்றம் வீசிக் கொண்டிருந்தது. கோட்டையின் நிலைமை, உண்மையிலேயே சகிக்க முடியாததாய் இருந்தது.[113]

வெடிப்புக்குப் பின், விரைவிலே, ஐரோப்பியர் ஒருவர் கோட்டை முன்பாக தன்னை வெளிப்படுத்தினார். அவருடைய பெயர் எசுதாக்கி டி லெனாய். ஆகத்து 2–இல் அவர், கன்னியாகுமரி டச்சு இராணுவத்திலிருந்து ஓடுகாலியாய் வெளியேறி திருவிதாங்கூர் மன்னனின் படையில் சேர்ந்து கொண்டார். ஒரு வாரத்திற்குப் பின்பாக, மன்னருக்கு அவர்மீது முழு நம்பிக்கை ஏற்பட்டதால், குளச்சலை முழுமையாக சரணடையச் செய்யும் வகையில் நிபந்தனையுடன் கூடிய பேச்சுவார்த்தையை நடத்தும் பொறுப்பினை அவரிடம் ஒப்படைத்தார். ஆகத்து 12,[114] டச்சுக் குழுவில் இடம்பெற்ற ஆவணக் காப்பாளர் காரல் கென்டிரிக் மற்றும் கொடி அடையாளமுடைய பெர்ட்ரம் ஆகியோருடன் திருவிதாங்கூர் முகாமில் வைத்து முறையான ஒப்பந்தம் ஒன்று கையெழுத்தானது.[115] ஆவணக் காப்பாளர், கோட்டையின் சாவிகளை மன்னரிடம் ஒப்படைத்தார். அவர்கள், கன்னியாகுமரியில் உள்ள டச்சுப் படையுடன் இணைந்து

கொள்ளும் வகையில் சுதந்திரமாக கடந்து செல்ல அனுமதிக்கப்பட வேண்டும் என்ற நிபந்தனையின்பேரில் டச்சுவினர் சரணடைந்த நிலையில், அதற்கு மாறாக, இரணியல் மற்றும் கல்குளம் கோட்டைக்கு அவர்கள் அழைத்துச் செல்லப்பட்டனர்.[116]

தனது பிறந்த நாளான ஆகத்து 15 அன்று, மார்த்தாண்டவர்மா குளச்சலுக்கு வருகை புரிந்தார். சிதைந்த உடல்களிலிருந்து வீசிய துர்நாற்றமும், அதற்கு மேலும், உயர் சாதியினரிடம் தொடர்புடைய அதிமேதகு பிராமணன் ஒருவன் கிறித்தவர்கள் வாழ்ந்த பகுதிகளில் வருகை புரியக்கூடாது என்பதாலும், அவர்களின் மரித்த உடல்கள் கிடக்கும் பகுதியிலிருந்து உடனடியாக அவர் மறைந்துவிட்டார்.[117] பின்னர், கோட்டை 60 அல்லது 70 மறவர்கள் மற்றும் 25 இதர வீரர்களால் பாதுகாக்கப்பட்டது. விரைவிலேயே, குளச்சல் கோட்டை அழிக்கப்பட்டுவிடும்.

ஆகத்து 16 அன்று, மார்த்தாண்ட வர்மாவின் ஓலையானது அவருடைய தூதுவர் வடிவீசுவரம் 'பட்டன்' சவீந்திர அண்ணாவி மூலம் கன்னியாகுமரிக்கு வந்து சேர்ந்தது.[118] ஆகத்து 9 அன்று எழுதப்பட்ட அந்த ஓலையில், கோவளம்மீது டச்சுவினர் நடத்திய தாக்குதலுக்கு மன்னர் கண்டனம் தெரிவித்திருந்தார். இராணுவ நடவடிக்கை எடுப்பதற்கோ அல்லது திருவிதாங்கூர் சொத்துக்களை பாழாக்குவதற்கோ டச்சுவுக்கு எவ்வகையிலும் அதிகாரம் எதுவுமில்லை என அவர் கூறியிருந்தார். அவருடைய பார்வையில், டச்சு கிழக்கிந்திய நிறுவனமானது வெறும் வர்த்தக நிறுவனம் மட்டுமேயன்றி இராணுவ விசயங்களில் தலையிட அதற்கு உரிமையில்லை. அரணின் வாசலை டச்சுவினர் அழித்ததுமில்லாமல் சில வீடுகளையும் தீ வைத்துள்ளனர்.[119] தன்னுடைய மன்னர் தற்பொழுது குளச்சலை கைப்பற்றிவிட்டார் என்று திருவிதாங்கூர் தூதுவர் கூறியதை, கோட்டாறு வியாபாரி ஒருவர் மூலம் டச்சுவினர் உறுதிபடுத்திக் கொண்டனர்.[120]

திருவிதாங்கூர் தூதுவரிடம், டச்சுவினர் தங்களது செயல்களை நியாயப்படுத்தி ஒரு ஓலையை எழுதிக் கொடுத்து,

அவரை மன்னரிடம் திருப்பி அனுப்பி வைத்தனர். அதில், மன்னருக்கு எதிராக எந்தவொரு தவறும் செய்ய ஒருபோதும் எண்ணியதில்லை என்று எழுதப்பட்டிருந்தது. அரண் வழியாக டச்சுவினர் அணிவகுத்து சென்றபோது திருவிதாங்கூரினர் அவர்களை அவமானப்படுத்தினர். அத்தியாவசியப் பொருட்களை வாங்குவதற்கு மட்டுமே அவர்கள் கோவளம் வந்தபோது திருவிதாங்கூர் வீரர்களால் துன்புறுத்தப்பட்டனர். டச்சு வீரர்கள் சிலரைப் பிடித்தனர். அவர்களுடைய வீரர்களை சுற்றிவளைத்தபோது, அவர்களை சிறைபிடிக்க மார்த்தாண்டவர்மா விரும்புகிறார் என்கிற எண்ணம் டச்சுவினருக்கு ஏற்பட்டது என எழுதியிருந்தார். இந்த காரணத்தின் அடிப்படையில்தான் அவர்கள் எதிர் தாக்குதலை துவங்கினர்.[121] கோவளம் நிகழ்வு குறித்து டச்சுவினர் கூறும் பொய்யான, கபடமான விளக்கம் தெளிவாகவே தெரிகிறது.

தியூனிசு மற்றும் திருவிதாங்கூர் தூதுவர் ஆகிய இருவரின் அறிக்கையின்படி குளச்சல் வீழ்ச்சி அடைந்துவிட்டது என்பது உறுதிபடுத்தப்பட்டது. இனி, திருவிதாங்கூரினர் தன்னுடைய கன்னியாகுமரி படைமீது கவனம் செலுத்துவார்கள் என காக்கர்ட் பயந்தார். கன்னியாகுமரியை தற்காத்துக்கொள்ள முடியாது என்பது அவரின் கருத்தாகும். உதாரணத்திற்கு, அந்த தேவாலயம் இருக்கும் இடத்தில் மட்டும்தான் ஆயுதங்களையும் அத்தியாவசியப் பொருட்களையும் பாதுகாத்து வைக்க முடியும். டச்சுவினர் சுற்றி வளைக்கப்பட்டால், குளச்சலில் அவருடைய நண்பர்கள் சந்தித்த கதியைத்தான் அடைய வேண்டியிருக்கும் என்பது மட்டுமல்ல, கோட்டையில் தண்ணீர் இரண்டு நாளைக்கு மட்டுமே இருந்தது.[122] அதனால், தூத்துக்குடிக்கு பின்வாங்கி விடுவதென காக்கர்ட் விரும்பினாலும், அவ்வாறு பின்வாங்குவது தோல்வியை ஒத்துக்கொண்டதாகும் என்பதனையும் அவர் உணர்ந்திருந்தார். குளச்சலில் டச்சுவின் இருப்பு என்பது மன்னரின் கோட்டாறு துணி வணிகத்திலிருந்து வரும் வருமானத்திற்கு ஆபத்தை விளைவிக்கும் என்பதால்தான் குளச்சலை மீட்டிட திருவிதாங்கூர் முனைப்பு காட்டியது. அதேவேளையில் கன்னியாகுமரியில் இருக்கும் டச்சுப் படையால்

*திருவிதாங்கூருக்கு ஆபத்து எதுவும் ஏற்படப்போவதில்லை என்பதனை காக்கர்ட் யோசிக்கவில்லை.*[123]

*ஆகத்து 17 அன்று, திருவிதாங்கூரால் குளச்சல் கைப்பற்றப்பட்டுவிட்டது என்கிற செய்தியை கொச்சியில் இருந்த தைன் வான் கொல்லெனெசே அறிந்தார். அத்தோடு அனைத்தும் நின்றுவிடவில்லை. பல்வேறு ஆபத்தான அறிக்கையின்படி, திருவிதாங்கூர் மன்னர், மார்ச் மாதத்திலிருந்து மதுரையை ஆட்சி செய்யத் துவங்கியிருக்கும் மராத்தியரிடம் தூதுவர் ஒருவரை அனுப்பி வைத்துள்ளார். மராத்தியர்கள், 1739 முதல் மதுரையை ஆட்சி செய்துவந்த சந்தா சாகிப் மற்றும் அவருடைய சகோதரர் ஆகிய இருவரையும் தோற்கடித்து வெற்றி பெற்றவர்கள்.*[124] *தூதுவர், மராத்திய ஆளுநர் அபய நாயக்கரிடம் கிழக்கிலிருந்து படையெடுத்து அங்கிருக்கும் நெடுமங்காடு கூட்டாளிகளை வெளியேற்ற வேண்டும் என்பதை இணங்கவைக்க முயற்சி செய்தார்.*[125] *அதற்கு தூதுவரிடம் அபய நாயக்கர், திருவிதாங்கூரின் அனைத்து செல்வத்தையும் பண்டமாற்றம் செய்வதாக இருந்தால் மட்டுமே மார்த்தாண்ட வர்மாவின் இராணுவத்திற்கு உதவி செய்ய முடியுமெனக் கூறினார். இது மிகவும் உதவியானதாக இருக்கவில்லை. உண்மையாகவே, அபய நாயக்கர் என்பவர் மார்த்தாண்ட வர்மாவின் நண்பர் அல்ல. விரைவிலேயே அவர், தூத்துக்குடியில் இருந்த டச்சுவுடன் இணைந்து திருவிதாங்கூருக்கு எதிராக செயல்பட ஆதரவு தெரிவித்தார். இந்த ஆதரவு எதற்கெனில், மதுரை புதிய ஆளுநரின் மருமகன் மைலப்பா முதலியாருக்கு, தென்மதுரைக்கு உட்பட்ட இடங்களான வள்ளியூர் மற்றும் பணகுடி ஆகியவைகளை கைப்பற்றுவதற்கு திருவிதாங்கூர் துணைநின்றது.*[126] *அவருடைய மாமாவால் மைலப்பா தோற்கடிக்கப்பட்டபோது உடனடியாக கோபுரத்தின் உள்ளே சென்ற அவர் தற்கொலை செய்து கொண்டார்.*[127] *மைலப்பாவுக்கு திருவிதாங்கூர் உதவி செய்ததன் காரணமாக மார்த்தாண்ட வர்மாமீது மராத்திய ஆளுநர் கோபம் கொள்ள நேர்ந்தது.*

*டச்சுவினர் அபயநாயக்கரின் ஆதரவினை குறித்து அச்சம் அடைந்ததற்கு காரணம் என்னவென்றால் குளச்சலில்*

அவர்கள் தோற்கடிக்கப்பட்டதை மராத்தியர்கள் சாதகமாக எடுத்துகொண்டு கன்னியாகுமரியில் இருக்கிற டச்சு இராணுவத்தின்மீது அவர்கள் தாக்குதல் நடத்தலாம். மதுரையில் இருந்து வெளியேற்றப்பட்ட நாயக்கரே சட்டப்படியான ஆட்சியாளர் என்பதாலும், அவர்களோடு டச்சுவினர் இன்றுவரை கூட்டணி வைத்து வருவதாலும், உண்மையாகவே மராத்தியர்கள் அவர்களுக்கு எதிரிகளாகவே தென்பட்டனர்.[128] இருப்பினும், போதிய எச்சரிக்கையுடன் தூத்துக்குடியில் இருந்த டச்சுவினர் புதிய மதுரை ஆளுநரை புண்படுத்தாது நடந்துகொள்ள முடிவெடுத்த நிலையில், திருவிதாங்கூர்மீது சரியான முறையில் தாக்குதல் நடத்துவது குறித்து விவாதிப்பதற்கு இரு தூதுவர்களை கன்னியாகுமரிக்கு அனுப்பும்படி அவரிடம் வேண்டிக் கொண்டனர்.[129]

1741 செப்டம்பர் துவக்கத்தில், மதுரைப் படைகள் கன்னியாகுமரியில் உள்ள திருவிதாங்கூர் எல்லையைத் தாண்டினர். அபய நாயக்கரின் மருமகனை ஆதரித்த படைகளை மதுரைப் படை துரத்தியது. அவருடைய வெற்றியைத் தொடரும்பொருட்டு குளச்சலில் ஒன்றும், இன்னொன்று கன்னியாகுமரிக்கும் தூத்துக்குடிக்கும் இடையிலும் இரண்டு தொழிற்சாலைகள் கட்டுவதற்கு அபய நாயக்கர் டச்சுவினருக்கு ஆதரவு அளித்தார். தளபதி காக்கர்ட்வுக்கு, அவருடைய உயர் அதிகாரிகளைத் தவிர உயர்வான அபிப்பிராயம் ஒன்றும் மராத்தியர்கள்மீது கிடையாது என்பதால் மதுரை ஆளுநரைப் பற்றி அவர் இவ்வாறாக எழுதினார்:

> “...மதுரை ஆளுநரைப்போன்ற மிகக் கொடுமையான, திமிர்பிடித்த, சுயநலமிக்க ஆட்சியாளர் யாருமில்லை என்பதாலும், அவருடைய புகழுக்காக வெறுக்கத்தக்க கிளர்ச்சியில் ஈடுபடுவது மட்டுமின்றி எங்களை சூழ்ந்து கொள்வதன்மூலம் அவர் எங்களை கடலுக்குள் தள்ளிவிட முடியுமென சந்தேகப்படுகிறேன்”.[130]

காக்கர்ட் தூத்துக்குடியை விட்டு பின்வாங்க விரும்பினாலும், இலங்கையில் இருந்த அவருடைய மேலதிகாரியும் ஆளுநருமான புரூனிங் அவருக்கு அனுமதி

வழங்கவில்லை. ஏனெனில், தங்களால் முடிந்த அளவிற்கு காக்கர்ட் மற்றும் அவரோடு உள்ளவர்கள் கொச்சி மற்றும் கொல்லம் ஆகிய இடங்களில் திருவிதாங்கூரின் கவனம் திரும்பாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டுமெனக் கருதினார்.[131] கொச்சி பாதுகாப்பு அற்றதாக இருந்ததால், அது எந்தவொரு தாக்குதலையும் தாக்குபிடிக்க முடியாது. காக்கர்ட், அவருடைய மேலதிகாரிகளுக்கு எதிராக எதுவும் செய்ய இயலாது என்பதால் கன்னியாகுமரியிலே தங்கி இருந்தார். எனினும், இந்த சாத்தியமற்ற சூழ்நிலை நாளுக்கு நாள் மோசமடைந்து வந்தது. அங்கு தட்டுப்பாடு நிலையில் உணவு, ஆயுதம் இருந்தது மட்டுமின்றி, வீரர்களுக்கு வழங்கவேண்டிய சம்பளப் பாக்கி அதிகரித்து வந்தது. திருவிதாங்கூரினர் மற்றும் மராத்தியினர் ஆகிய இருபுற வீரர்களின் தொடர் அச்சுறுத்தலால் கன்னியாகுமரியில் இருந்த டச்சு வீரர்கள் உளவியல் ரீதியாக பாதிக்கப்பட்டனர். அதிகாரிகளுக்கும் வீரர்களுக்கும் இடையில் பதற்றம் ஏற்பட்டது. தவறாக நடக்கவும், குடித்துவிட்டுப் போதையில் வெளிப்படையாகவே சண்டையிடவும் செய்தனர். கன்னியாகுமரியில் ஏற்பட்ட மோசமான சூழ்நிலையின் காரணமாக, பல வீரர்கள் ஓடிவிட்டதால் வீரர்களின் மனவுறுதி கணிசமாகவே தளர்வடைந்தது.

12 ஆகத்து1741 அன்று, தங்களுடைய அதிகாரிகளுக்கு எதிராக வீரர்கள் கிளர்ச்சி ஏற்படுத்த திட்டமிட்டுள்ளனர் என்பதனை காக்கர்ட் கண்டறிந்தார். அதைப்பற்றி ஏதாவது தெரியுமா என படைத் தலைவர்களிடம் அவர் கேட்டபோது, அதற்கு அவர்கள் அது வதந்தி என பதில் உரைத்தனர். அந்த வதந்திகள் போதியளவு எச்சரிக்கையை ஏற்படுத்தியதால், அணிவகுப்பு மூலம் அவருடைய வீரர்களின் பற்றுறுதியை சோதிக்கத் தீர்மானித்தார். வீரர்கள், காக்கர்ட்டுவின் வீடு முன்பாகக் கூடி அணிவகுப்பிற்கு மறுப்பு தெரிவித்தபோது, அவர்களில் மூன்று கிளர்ச்சியாளர்களை அவர் கைது செய்தார். அவர்களுடைய தோழர்கள் சிறைச்சாலைக்குச் சென்று, அவர்களை விடுதலை செய்யாவிட்டால் தாக்குதல் நடத்துவோம் என மிரட்டியதால், அது ஒரு மோசமான விளைவை ஏற்படுத்தியது. அவர்கள் மூன்று பேரையும்

விடுதலை செய்யாவிட்டால் அவர்களோடு நாங்களும் சிறைக்குச் செல்வோம் என முழக்கமிட்டனர். காக்கர்ட், தன்னுடைய பிரம்பு கம்பால் அவர்களை அடித்து மிரட்டியபோதும், அது எந்தவகையிலும் பலனளிக்கவில்லை. அதன்பின்பாக அவர் அனைத்து வகையான வசப்படுத்தும் அதிகாரத்தாலும் பசப்பு வார்த்தையாலும் பேசி போராட்டக்காரர்களை இறுதியில் அமைதிபடுத்தினார்.[132]

அங்கிருக்கிற குடியிருப்பினைவிட்டு சீக்கிரமாக வெளியேறுவது குறித்து உத்தரவிடுவதற்கு வசதியாக கன்னியாகுமரி வீரர்களின் கிளர்ச்சியை நல்லதொரு காரணமாக இலங்கை ஆளுநர் புரூனிங் கருதினார். புறப்படுவதற்கான முடிவினை டச்சுவினர் எடுத்திருப்பதாக மதுரையில் உள்ள மராட்டிய ஆளுநர் அபய நாயக்கரிடம் தகவல் சொல்ல கன்னியாகுமரி போர்க் குழுவுக்கு அவர் அறிவுரை வழங்கியிருந்தது வழக்கமான யுக்தியின் ஒரு பகுதியாக இருந்தது. அவ்வாறு இல்லையெனில், டச்சுவினர்மீது தாக்குதல் நடத்துவதற்கு ஆளுநர் அதிகமாகவே கவனம் செலுத்துவார்.[133] ஆம், அனைவரும் பார்க்கும் வகையில் டச்சு கிழக்கிந்திய நிறுவனம் தென்திருவிதாங்கூரை விட்டு விலகிச் சென்றது. செப்டம்பர் 22, நான்கு கப்பல்களில் முடிந்தளவு பல வீரர்களையும், அத்தியாவசியப் பொருட்களையும் ஏற்றிக்கொண்டு வெளியேறினர். இந்தப் படைகள், தூத்துக்குடிக்கு அனுப்பப்படாமல் கொல்லத்திற்கு அனுப்பப்பட்டனர். நான்கு மற்றும் ஐந்து அக்டோபர், மேலும் 388 வீரர்கள் வெளியேறிய அதேசமயம் கன்னியாகுமரி முகாமினை இடித்துவிட இலங்கையிலிருந்து உத்தரவு வந்தது.[134] ஆங்கிலேயர் இது குறித்து அறிக்கையில் கூறியிருப்பதாவது:

> “காலந்தினர் கேப் கொமரினில் (கன்னியாகுமரியில்) இருந்து தங்களுடைய படைகளுடன் பின்வாங்கி, கொல்லத்திற்கு இரண்டு கப்பல்கள் மற்றும் பல ஒற்றைப் பாய்மரக் கப்பல்களில் ஏற்கனவே அவர்களை அழைத்துச் சென்ற நிலையில், இப்பொழுது மிகப்பெரிய தயாரிப்புடன் கொலச்சலுக்குப் (குளச்சலுக்குப்) பதிலாக ஆற்றிங்கலை அணிவகுப்பின்றி கைப்பற்ற உள்ளனர். திருவிதாங்கூர் மன்னர், முதல் நோக்கமாக அவர்களை

35. Translaet van een Portugees Briefje onder dato 3 Januarij dezes jars (1748) door den Roomsen Pater van Alajarcoil (Alakarkovil, Tamilnadu) aan den Trevancoorsen Capitan (De Lannoy) geschreven ter bestelling medegegeven aan den op Nieuwjaarsdag van hier gedeserteerden soldaat Pieter van Gelder; ARA, VOC 2713, fol. 969.
36. The Kaimal here referred to was the chief of what is nowadays modern Ernakulam. He belonged to the group of nayar chieftains called the Anchi Kalmal (which means the Five Kamimals) who were partly subjects of the Zamorin and partly of the Cochin king.

## அத்தியாயம் – 3

# விசாரணை மன்றத்தின் முன்பாக காக்கர்ட் மற்றும் லெசுலோரன்ட்

செப்டம்பர் 1740–இல், திருவிதாங்கூர் போருக்குப் பின்பாக தைன் வான் கொல்லெனெசே, விசாரணை மன்றம் ஒன்றினை உருவாக்கினார். இதில் சுவராசியமானது யாதெனில், ஒரு வருடத்திற்கு முன்பாக, இதன் தலைவராக யோவான்னா காக்கர்ட் இருந்த நிலையில் அவரே மன்றத்தில் குற்றம் சாட்டப்பட்டார். இந்த அவையானது திருவிதாங்கூருக்கு எதிரான போர் விசயத்தில் இராணுவம் மற்றும் குற்றவியல் என அனைத்து வழக்குகளையும் விசாரித்தது. இதுபோன்ற விசாரணை மன்றங்கள், டச்சு கிழக்கிந்திய நிறுவனம் அமைந்திருந்த அனைத்து இடங்களிலும் இருந்தது என்கிறார் சுமித்.[1] அங்கே, நிர்வாகம் மற்றும் சட்ட அதிகாரம் ஆகியவற்றிற்கு இடையில் பலமான பிரிவுகள் இருந்ததில்லை. உண்மையில், அனைத்து டச்சு கிழக்கிந்திய நிறுவனத்திலும், படாவியாவைத் தவிர்த்து, பணி வல்லுநர்களான வழக்குரைஞர்களும் நீதிபதிகளும் இருந்ததில்லை.[2] இது நீதித்துறையை கணிசமாக பாதித்தது. மலபாரிலும் விதிவிலக்கின்றி, காக்கர்ட்வுக்கு எதிரான விசாரணையானது வரி மற்றும் முதன்மை வணிகர் கென்டிரிக் வென்டலின் கோலர் முன்பாக துவங்கியது.[3]

காக்கர்ட்வுக்கு எதிரான விசாரணையின் முக்கியப் புள்ளியாக இருந்தது என்னவென்றால், குளச்சலை விடுவிக்க முடியாது என்கிற தீர்மானத்தில், போர்க்குழுவில் உறுப்பினர்களாக இருந்த இருவர் கையெழுத்து போடுவதற்கு மறுத்தார்கள் என்பதே. அதில் ஒருவர், டச்சு தரப்பு விசாரணை அதிகாரி கோலர். அன்றைக்கு போர்க்குழுத் தலைவராகவும், அவருடைய மூத்த அதிகாரியாகவும் இருந்த

காக்கர்ட் கொண்டுவந்த தீர்மானத்திற்கு எதிராக வாக்களித்தவர் இவர்தான். இதன் காரணமாகவே காக்கர்ட், கோலாரிடம் தன்னுடைய ஆவணங்களை சமர்பிக்க மறுத்துவிட்டார். காக்கர்ட் மேலும், மலபார் பகுதியில் தனக்குத் தீர்ப்பளிக்கப்பட இருப்பதையும் நிராகரித்தார். அவர் கேட்டுக்கொண்டது என்னவென்றால், அனைத்து உள்ளூர் பணிகளில் இருந்தும் தன்னை இடைநீக்கம் செய்ய வேண்டும் என்றும், அதன்மூலம் அவர் கொழும்பு அல்லது படாவியா நீதிமன்றம் முன்பாக பங்கேற்க முடியுமென்றும் கூறினார். கொழும்பு ஆணையர் மட்டும்தான் அவரை சிலோனில் இருக்கிற போர் அவை முன்பாக நிறுத்தி தீர்ப்பளிக்க முடியும் என்பது அவரின் உரிமைக்கான கோரிக்கையாகும். அதற்கு தைன் வான் கொல்லெனெசே, மலபாரில் இருக்கும் காக்கார்ட்வை அவருடைய துணை அதிகாரி (இரண்டாவது உத்தரவு அதிகாரி) இந்த அவையில் விசாரணை செய்ய முடியுமென வாதிட்டார்.[4] இதனால் அவருடைய கோரிக்கை நிராகரிக்கப்பட்டது மட்டுமின்றி உள்ளூர் அவையின் விசாரணைக்காக காக்கர்ட் காத்திருக்க வேண்டியதாயிற்று.

காக்கர்ட், அவர் தரப்பு ஆவணங்களை கோலரிடம் கொடுப்பதற்கு தொடர்ந்து மறுத்துவந்தார். அவர் கூறியது யாதெனில், தைன் வான் கொல்லெனெசே, போரின் தொடக்க நிலையிலே அவரது கடமையைப் புறக்கணித்துவிட்டு சென்றதைக் குறித்து அவரை யாரும் குற்றம் கூறவில்லை.[5] அத்துடன், அவர்மீது முன்புகார் எதுவும் இல்லை என்பதால், அவரை யாரும் குற்றம் காண முடியாது என்றார். 25 திசம்பர் 1741 அன்று, தைன் வான் கொல்லெனெசே கொல்லம் வந்து சேரும்வரை, காக்கர்ட் விசாரணையை இழுத்தடித்து வந்தார். தைன் வான் கொல்லெனெசே கூற்றுப்படி, திருவிதாங்கூர் போரின் தோல்விக்கு முக்கிய காரணம் காக்கர்ட்தான். காக்கர்ட், குளச்சல் வீழ்ச்சிக்கு பொறுப்பாளியாக இருந்ததைத் தவிர, காவலர்களின் தலைவர் என்ற முறையில், அவரின் செயல்பாடு ‘மிகுந்த கொடுங்கோல்’ நிறைந்ததாகவே எப்பொழுதும் இருந்து வந்துள்ளது என்றார்.[6]

31 திசம்பர் 1741 அன்று, மலபாரை விட்டுச் செல்வதற்கு காக்கர்ட் கோரியபோது, அனுமதி மறுக்கப்பட்டது. அதனால்,

அவர் தரப்பில் எதிர்வாதம் வைப்பதற்கு வேண்டி, அவருக்கு எதிராக கொடுக்கப்பட்ட புகார்களின் மனு நகல்களை கேட்டு காக்கர்ட் கோரிக்கை வைத்தார்.[7] அதன் நகல்கள் கொடுக்கப்படும் வரை கோலரின் கேள்விகளுக்கு பதில் அளிக்க முடியாதென காக்கர்ட் கூறினார். அவர் மேலும் கூறியதாவது, இப்பொழுது தைன் வான் கொல்லெனெசேவின் அதிகாரத்தில் இருக்கும் அவருக்கு, பின்னாளில் தனக்கு ஏற்படுவதுபோல் அவருக்கும் ஏற்படலாம் என்றார். அதற்கு தைன் வான் கொல்லெனெசே பதிலளித்ததாவது:

> இந்த வார்த்தைகள், ஒருவேளை வசந்தத்தை இழந்த ஓர் அப்பாவி மனிதனின் வாயிலிருந்து ஓடிவந்தவையாக இருப்பினும், அவர் யாரெனில் நேர்மையில்லாதவர், அவருடைய உயர் அதிகாரிகளால் குற்றம் சாட்டப்பட்டவர். ஆனால், அவையெல்லாம் எந்தவிதத்திலும் பொருத்தம் இல்லாதவையாக மதிப்பிற்குரிய காக்கர்ட் வாயிலிருந்து வெளிவந்தவை.

11 சனவரி 1742 அன்று, அதிகாரப்பூர்வமாக காக்கர்ட் விசாரணை மன்றத்தால் குற்றம் சாட்டப்பட்டார். இந்த அதிகாரப்பூர்வ பழிசுமத்தலில், அவருடைய முன்னாள் உறுப்பினர்களால் பல்வேறு வகையான கடுமையான குற்றச் செயல்களுக்கு காக்கர்ட் உள்ளாக்கப்பட்டார். அவை:

1) தைன் வான் கொல்லெனெசேவிடம் இருந்து அனுமதி பெறாமல் குளச்சலை விட்டு வெளியேறியது.
2) திருவிதாங்கூரினரின் குளச்சல் முற்றுகையை தடுத்து நிறுத்துவதில் ஏற்ப்பட்ட தோல்வியால், அவர்களின் கோட்டைகளை இழக்க நேரிட்டது.
3) குளச்சலிலுள்ள கட்டுமானப் பணியின் முன்னேற்றத்தை கவனிப்பதில் கட்டுப்பாடு இல்லாமல் போனது.

அதேநாளில், அவருடைய கோரிக்கையானது படாவியாவுக்கு அனுப்பி வைக்கப்பட்டு, அங்கு விசாரிக்கப்பட வேண்டும் என திரும்பத்திரும்ப காக்கர்ட் முன்வைத்தார். அவருக்கு எதிரான புகார்கள்தான் முதலில் விசாரிக்கப்பட வேண்டும் என்பதால் அவருடைய கோரிக்கை மீண்டும் நிராகரிக்கப்பட்டது.[8]

இந்நிலையிலும், அவருடைய ஆவணங்களை போர் குழுவினரிடம் கொடுப்பதற்கு காக்கர்ட் மறுத்தார். ஆவணங்களை அவருடைய அறையில் பூட்டுபோட்டு பூட்டியது மட்டுமின்றி, அவருடைய சொந்த பாதுகாப்பிற்கு அவை தேவை என்றார். அவரை குற்றச்செயல் புரிந்ததாக குற்றம் சாட்டியதால், கோலருக்கு எதிராக புகார் மனு ஒன்றினையும் தாக்கல் செய்தார். விசாரணைக்கு காக்கர்ட் ஒத்துழைப்பு கொடுக்கவில்லை. காக்கர்ட், அவரது ஊழியர்களை பழிசொல்லியும் பயமுறுத்தியும் நடந்து கொள்ளாதபோதும் அவரின்கீழ் உறுதிமொழி எடுத்துக் கொண்டவர்கள், அவர்மீது பல்வேறு குற்றச்சாட்டுகளை முன்வைத்தனர்.[9] காக்கர்ட் கூறும்போது, விசாரணை அதிகாரிக்கு எழுதத் தைரியம் இல்லாததால்தான் தைன் வான் கொல்லெனெசேவுக்கு பிடிக்காத எதையும் பதிவிட மறுக்கிறார் என்றார். இது, தைன் வான் கொல்லெனெசேயை படாவியாவுக்கு எழுதத் தூண்டியது.

> என்னுடைய கடுமையான வார்த்தைகள் என்னவென்றால், நான் ஒருபோதும் தன்னிச்சையாகவோ, வெறுக்கப்பட்ட தளபதியாகவோ செயல்பட்டது இல்லை. நான் இந்த மனிதனுக்கு எந்த தவறும் செய்யவில்லை. இன்னும், இதற்கு மாறாக, அவருடைய எரிச்சலூட்டும் செயல்பாட்டிற்கு மத்தியிலும் நான் அவரிடம் மிகவும் மென்மையாகவே நடந்து கொள்கிறேன்.[10]

14 மார்ச் 1742 அன்று, அவமதிப்பு காரணமாக அனைத்து செயல்பாடுகளில் இருந்தும் காக்கர்ட் விலக்கி வைக்கப்பட்டார்.[11] மேலும், விசாரணை முறையாகத் துவங்குவதற்கு முன்பாகவே, அவர், அவருடைய இராணுவ மரியாதை மற்றும் ஊதியம் ஆகியவற்றை இழந்ததோடு நடைமுறையில் குற்றவாளி எனக் கருதப்பட்டார்.

போர் காலங்களில் அவருடைய உயர் அதிகாரிகளின் தகவல்களைப் பெறாமல் இருந்ததாக, தைன் வான் கொல்லெனெசே புதியதொரு குற்றச்சாட்டை காக்கர்ட்மீது வைத்தார். காக்கர்ட்வை பொறுத்தளவில், மோசமான

வானிலை காரணமாக தூத்துக்குடிக்கு செல்ல வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. குளச்சலுக்கு வழங்க வேண்டிய படையுதவி தோல்வியுற்றதற்கு போதிய மாடுகள், கூலியாட்கள் மற்றும் உணவுப் பொருட்கள் இல்லாமையே ஆகும். இதைத்தவிர காக்கர்ட்வின் வாதம் என்னவென்றால், டச்சுவின் இராணுவ செயல்பாட்டினை விரிவான அறிக்கையாக அனுப்பினால், அதனை எதிரிகள் வெகு எளிதில் தலையிட வாய்ப்புண்டு.[12] பல நாட்களுக்குப் பின்பாக காக்கர்ட் விரக்தியில் படாவியாவுக்கு எழுதியதாவது:

> நான் வெளிப்படுத்துவது யாதெனில், மிகவும் கொடுமையான குற்றச்சாட்டிற்கு தளபதியால் உட்படுத்தப்பட்டிருக்கும் இச்சூழ்நிலையில், அது வெகுதூரமாகவே பயணித்து அனைவராலும் என்னை குற்றம் சாட்டிக் கொண்டிருக்கும் நிலையில் என்னுடைய நேர்மையின்மை மற்றும் மோசமான செயல்களுக்காக தளபதி (தைன் வான் கொல்லெனேசே) மிக மென்மையாகவும் நட்பாகவும் என்னை வழிநடத்திக் கொண்டிருக்கிறார்.

காக்கர்ட் கருத்துப்படி, அவருக்கு எதிரான குற்றச்சாட்டு என்பது அவதூறு மற்றும் அவமானம் ஆகியவற்றிற்கு உள்ளாக்குதல் எனினும், அவை வதந்தியே ஆகும். சில சாட்சிகள், கோலர் வீட்டில் தங்கியிருப்பதும், இலவச உணவுகளை பெற்றுக் கொள்வதும் மட்டுமின்றி, அவர் வீட்டு விருந்தினர்களுக்கு அளிக்கும் அனைத்துவகை வசதிகளுக்கும் நட்புக்கும், அதிகளவில் அவரால் புகார் மனுக்களை பெற்றுக்கொள்ள முடியும். இன்னும் எஞ்சியுள்ள காக்கார்ட் நண்பர்கள், அவருக்கு எதிராக கொடுக்கப்பட்ட அதிக அளவிலான புகார் மனுக்களை பார்த்தும், நம்ப முடியாதவர்களாய் இருந்தாலும், அவர் சில நாட்களிலே எண்ணற்ற தவறுகளை செய்துவிட்டதான தோற்றத்தை அது கொடுத்தது. அதன்விளைவாக, போர் மன்றத்தில் யாரும் அவருக்காக வாதிட தைரியம் கொள்ளவில்லை.[13]

படாவியாவுக்கு எழுதப்பட்ட மேல்முறையீடுகள் பயனில்லாமல் போனது. அதேவேளையில், இந்த

செயல்பாடுகள் தொடர்ந்தது. இறுதியாக, 27 மார்ச் 1742 அன்று, அவரின் கைவசம் இருந்த ஆவணங்களை போர் மன்றத்தின் முன்பாக காக்கர்ட் சமர்பித்தார். இப்பொழுது புகார் மனு ஒன்றினை தைன் வான் கொல்லெனெசேவுக்கு எதிராக படாவியாவிலுள்ள உயர் அவைக்கு எழுத அவர் நினைத்தபோது, அது பின்பாக தடை செய்யப்பட்டது. அவர், அவரின் உயர் அதிகாரிகளுக்கு எதிராக புகார் மனு அளிக்க விரும்பினால் மலபார் அவையில்தான் கொடுக்க வேண்டும். உயர் அவையின் உத்தரவுகளை கண்டிப்பாக மரியாதை செய்ய வேண்டும் என்பது தைன் வான் கொல்லெனெசே உத்தரவு என்பதால், அதில் ஆச்சரியப்படுவதற்கு ஏதுமில்லை. திறமையின்மை, பயனற்ற நடத்தை ஆகியவைகள் நன்கு அறியப்பட்ட நிலையில் ஒரு விளையாட்டுத்தனமான ஊழியருக்கு அந்த விதியில் வேறு எந்த விதிவிலக்கும் இல்லை. போர் மன்றமானது, காக்கர்ட்டின் அணுகுமுறையில் மாற்றம் செய்ய விரும்பியபோதும், அது வீணானது. அதற்குப் பதிலாக, போர் மன்றத்தின் தீர்மான அறிக்கையின் அன்றைய நாளில், “எங்களுடைய பண்பான பதில்களுக்கு, கண்ணியமான அறிவுரைகளுக்கு மிகவும் கொடூரமான மற்றும் திமிரான முறையில்” குற்றவாளி நடந்துகொண்டார் எனக் குறித்துள்ளனர்.[14]

காக்கர்ட்வின் வாதம் என்னவென்றால், அவர் திறமையற்றவர் என்றால் அது அவரின் உயர் அதிகாரி தைன் வான் கொல்லெனெசே மற்றும் அவரை குற்றம்சாட்டும் கோலர் ஆகியோரையும் குறிக்கும் என்றதுடன், டச்சு கிழக்கிந்திய நிறுவனத்தின் கப்பல்கள் குளச்சலில் இருந்து தூத்துக்குடிக்கு சென்றதன் மூலம் அதிகச் செலவீனங்களை மரியாதைக்குரிய நிறுவனம் தவிர்த்துக் கொண்டது என ஏளனம் செய்தார்.[15] இந்த தவிர்த்தல் விரைவிலே கோலரால் மீட்கப்பட்டது எப்படியெனில், குற்றச்சாட்டிற்கு கூடுதலாகவே 37,589 கில்டர்கள் (டச்சு சில்வர் நாணயம் உத்தேசமாக 31311.637 ரூபாய்) மற்றும் 60 சென்ட் நிலம் எனக் கணக்குச் செலவில் சேர்த்துக் கொண்டார்.[16]

அது உண்மையாக இருந்தாலும், படாவியா உயர் அவைக்கு நேரடியாக எழுதுவதில் அவருக்கு தடை

விதிக்கப்பட்டிருந்தது. இருப்பினும் காக்கர்ட், அவர்மேல் வைத்திருந்த குற்றச்சாட்டு குறித்து கடுமையான முறையில் பொது ஆளுநர் தேதனுக்கு தொடர்ந்து புகார் மனு அனுப்பிக் கொண்டிருந்தார்.[17] தேதனுக்கு காக்கர்ட் எழுதிய கடிதத்தில், திருவிதாங்கூர் போர் குறித்து அவர்மீது குற்றம் சாட்டுபவர்கள் தவறான பார்வையை தந்திருக்கிறார்கள் என எழுதியிருந்தார். இதில் அதிக அதிர்ச்சியூட்டும் செய்தி என்னவென்றால், வழக்கு தொடுத்திருக்கும் நபரே, போர் காலத்தில் அதில் ஒருவராக பயணப்பட்டார் என்பதே. இது உரைப்பது என்னவெனில், அவரும் அப்போதைக்கு எடுத்தத் தீர்மானத்தை ஒத்துக்கொண்டார் என்பதே. வழக்கு தொடுத்த நபர், பெரிய தொகுதியாக குற்றச்சாட்டுகளை தொகுத்து வைத்திருந்தார். அதனைப் போர் குழுவில் ஒப்படைக்கும்போது, “அதில் கேலியான இகழ்ச்சியான மகத்தான பொய்களும், தவறான குற்றச்சாட்டுகளும் மிகுந்தளவு வெளிப்படும்” என காக்கர்ட் உறுதிபடக் கூறியிருந்தார்.[18]

இதில் ஆர்வமாக தோன்றுவது யாதெனில், படாவியாவில் இருக்கிற உயர் அவையினருக்கு காக்கர்ட் எழுதியதாவது: அவர்மீது வழக்கு தொடுத்தவர் கொடுத்திருக்கிற அறிக்கையில், “அந்த துரோகிகள் யாரெனில் அவர்கள் விரைவில் ஓடிவிடுவார்கள்” என குறிப்பிட்டுள்ளார். இன்னொரு வகையில் சொல்வதாக இருந்தால், வழக்கு தொடுத்தவரின் அறிக்கையின்படி ஓடுகாலிகள் என்பவர்கள் மார்த்தாண்ட மன்னரின்கீழ் சேவை செய்பவர்கள். காக்கர்ட் மேலும் கூறியதாவது, தைன் வான் கொல்லெனெசே போர்க் களத்தில் இருந்து வெளியேறியதன் நோக்கமானது அவர் சுகமில்லாமல் இருந்தார் என்பதே. அதேவேளையில், காக்கர்ட் கூற்றுப்படி, தைன் வான் கொல்லெனெசே, தோல்வியை எதிர்பார்த்த நிலையில் கொச்சிக்குத் திரும்பிச் சென்றதன் மூலம் காக்கர்ட்வை பலிகிடா ஆக்கிவிட்டார். எனினும், தனது கைகளை சுத்தப்படுத்த தைன் வான் கொல்லெனெசே முயலுகிறார். இதற்காக, அவருக்கு முழு அளவில் உதவி செய்பவர் கோலர். இதுகுறித்து காக்கர்ட் அவருடைய வார்த்தையில், “அவருடைய அடிமையிடம் மதிப்பிற்குரிய தளபதி, பதவி உயர்வுக்காக வேண்டி அவனையே சார்ந்திருக்க

வேண்டியதாயிற்று” என்றார். எல்லோருக்கும் தெரிந்தது என்னவென்றால், முன்னவர் பெரிய அளவில் பின்னவரிடமிருந்து கடன் வாங்கி இருந்ததால் தளபதியின் ஆதரவின்றி வழக்குத் தொடுப்பவர் இயங்க முடியாது. வழக்கு தொடுத்தவர் தளபதியின் விருப்பத்திற்கு மாறாக இயங்கினால் அவரிடமிருந்து மேலும் பணம் வாங்க முடியாது. காக்கர்ட் கூற்றுப்படி, இவையெல்லாம் சொல்வது யாதெனில், இந்த தீவிர குற்றச்சாட்டிற்கு காக்கர்ட் போலியாக உள்ளாக்கப்பட்டிருக்கிறார் என்பதே.[19]

கோலரின் இந்த சாதகமற்ற போக்கில் காக்கர்ட் ஒருவர் மட்டும் இடம்பெறவில்லை. தைன் வான் கொல்லெனெசேவின் அடுத்த நிலையில் இருந்த அலுவலர் சியர்சுமா என்பவர் கோலர் குறித்து அழகான வார்த்தைகளில் விவரிப்பதாவது:

> பெரும்பாலான நேரங்களில் வீட்டிலேயே தங்கி இருக்கும் ஓர் வீட்டு சேவகர் கோலர். குறிப்பாக அலுவலகத்தில் வேலை அதிகரிக்கும்போது இது நடக்கிறது. பல புகார்கள் வருகிறபோது, அவருக்கு நெஞ்சு வலி இருப்பதுபோன்று நடிப்பார். அதனால் தளபதியே, அலுவலகப் பணிகளை நேரில் வந்து கையாளுவார். அதனால் அவர் தளபதி மட்டுமல்ல; கோலரின் சொந்த செயலாளர்.

அதற்கு மேலும், “அவருடைய மனைவி மற்றும் மாமியார் பெரிய முட்டாள்கள் மட்டுமின்றி, இந்த கடலோரத்தில் பிடிவாதமான பாப்பரசரின் கெட்ட குணத்தைக் கொண்டவர்கள்” என கோலரின் குடும்பத்தைக் குறித்தும் விவரித்துள்ளார்.[20]

பொது ஆளுநரிடம் மீண்டும் காக்கர்ட் வைத்த கோரிக்கை என்னவென்றால், விசாரணை மன்றத்தில் அவரைப் பாதுகாக்கும் வகையில் பேசக்கூடிய கண்ணியமான, திறமைவாய்ந்த ஒருவரை அவருக்காக அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொண்டார். அந்த கடிதத்தில் அவர் குறிப்பிட்டுள்ளதாவது: அவர் தண்டிக்கப்பட்டால், போர்க்குழு முழுவதும் மட்டுமல்லாமல், திருவிதாங்கூர் போரின்போது

தலைமைத் தாங்கிய அனைவரையும் அது பாதிப்பிற்கு உள்ளாக்கும் என்றார். இதனிடையில் குற்றச் சாட்டுகளின் தொகுப்பு தொடர்ந்தது. அது ஏற்கனவே, அரை கட்டு காகிதங்களை நிரப்பிவிட்டன. அதனால் காக்கர்ட் படாவியாவுக்கு எழுதியது என்னவெனில், இது பார்ப்பதற்கு எப்படி இருக்கிறது என்றால் அவருடைய முழு வாழ்க்கையையும் மிகப் பெரியளவில் வரிசையான தொகுதிகளாக எழுதப்பட்டு கொண்டிருக்கிறது.[21]

காக்கர்ட், அனைத்து பணிகளிலிருந்தும் நீக்கப்பட்ட பின்பாக, அவருக்கு அவராலே உதவி செய்ய முடியாத நிலைமை ஏற்பட்டது. அவர் கோரிய தவணைத் தொகை மறுக்கப்பட்டது. இதனால், அவருக்கு எதிரான குற்றச்சாட்டுகளின் நகல்களைப் பெறுவதற்கு பணம் செலுத்த வேண்டியது நியாயமற்றது என காக்கர்ட் கருதினார். காக்கர்ட், அவருடைய நீதிபதிகளை முறையற்ற நடத்தையினர் மற்றும் ஒழுக்கமற்றவர்கள் என குற்றம்சாட்டி விமர்சனம் செய்தார்.

> நன்கு அறியப்பட்ட குடிகார படைத் தலைவன் சான் டிர்க் வான் டேர் புரூகன் சத்தியப் பிரமாணம் செய்ததுமில்லாமல், தவறான அறிக்கையை கொடுத்ததுமின்றி என்னிடம் வந்து கூச்சலிட்டு கூறியதாவது: “இப்பொழுது, நான் நம்புகிறேன்; நான் பழிவாங்க முடியும்”. வான் டேர் புரூகன் மற்றும் அனைவரையும் அதிகபட்சமான நட்புமுறையில் நடத்துகிறார் தளபதி (தைன் வான் கொல்லெனெசே). ஆம், அத்துடன் அவர்களின் பதவி மற்றும் சம்பளம் ஆகியவையும் உயர்வு பெற்றுள்ளது.[22]

படாவியாவில் வைத்து தன்னைத் தீர்ப்பிட வேண்டுமென காக்கர்ட் வைத்த கோரிக்கையானது தைன் வான் கொல்லெனெசேயால் மீண்டும் ஒருமுறை நிராகரிக்கப்பட்ட நிலையில், அவர் படாவியாவுக்கு எழுதியதாவது: “இது தேவையற்ற தாமதத்தை ஏற்படுத்துவது மட்டுமின்றி, இது மர்மமான மற்றும் தவறான நிர்வாகக் காரணங்களால் மட்டுமே ஏற்படுவதாக காக்கர்ட் கூறினார்”.[23] தைன் வான் கொல்லெனெசேவுக்கு ஏற்கனவே தெரிந்தது

யாதெனில், காக்கர்ட் படாவியாவில் இருந்தாலும், அவருடைய சொந்த வாழ்க்கைக்கான வாய்ப்புகளில் முன்னேற்றத்தை அடைய முடியாது. அதேநேரத்தில், சரியான விசாரணையின்றி காக்கர்ட்வுக்கு எதிராக ஒரு முறையான புகாரை கோலரால் உருவாக்கிவிட முடியவில்லை.

28 மே 1742 அன்று, அவர் தன்னை பணியிலிருந்து விடுவிக்க வேண்டுமென கேட்ட நிலையில், விரைவிலேயே அவரது குடும்பத்தாரோடு அவர் கொழும்புவுக்குச் சென்றார். சில நாட்களிலே, சூலை 1742–இல் தைன் வான் கொல்லெனெசே சிலோனின் ஆளுநராக பதவி உயர்வு பெற்றார்.[24] அதன்பிறகு, தைன் வான் கொல்லெனெசேவிடம் இருந்து காக்கர்ட்வின் வாழ்வில் எந்தவித அச்சுறுத்தலும் ஏற்படாத நிலையில் 31 திசம்பர் 1742 அன்று படாவியாவுக்கு அனுப்பி வைக்கப்பட்டார்.[25]

குற்றவழக்கில் லெசுலோரன்ட்:

காக்கர்ட் மட்டுமே விசாரணை மன்றத்திற்கு முன்பாக நிறுத்தப்படவில்லை. ஆன்டிரிசு லெசுலோரன்ட்வின் செயல்பாடுகளும் கோலரால் விசாரணைக்கு உட்படுத்தப்பட்டது. அவர்மீது வைக்கப்பட்ட அவதூறு, தைன் வான் கொல்லெனெசே மற்றும் கோலர் ஆகியோரால் முன்வைக்கப்பட்டது. மன்றத்தின் முன்பாக, குற்றம் சாட்டப்பட்டவர் தோன்ற மறுத்ததோடு மட்டுமின்றி, புதுப்பிக்கப்பட்ட அவதூறாகவும், பகிரங்கமாக அவமானப்படுத்துவதாகவும் அழைப்பாணைக்குப் பதில் அளித்தார்.[26] இறுதியில், அவரை வலுக்கட்டாயமாகவே அவையின் முன்பாக தோன்றச் செய்தபோது, அவர்மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகள் யாதெனில்: (1) ஊழல், (2) அலட்சியம் செய்தல் மற்றும் (3) தவறான நடத்தை.

குளச்சல் கோட்டையானது லெசுலோரன்ட்வின் மேற்பார்வையில் கட்டப்பட்டது. அதனை கட்டுவதில் ஏற்பட்ட அதிகபட்ச தாமதத்திற்கு கட்டிடத்தின் மூலப்பொருட்கள் போதியளவு இல்லாததே காரணமாகும். இது அரிதானதொரு செயலாயினும், அளவுக்கு அதிகமான

கற்களும், மரங்களும் கொச்சிக் கோட்டையில் இருந்து அனுப்பி வைக்கப்பட்டு இருந்தது. இருப்பினும், லெசுலோரன்ட்மீது வைக்கப்பட்ட ஊழல் குற்றச்சாட்டானது கோட்டை தாமதமாக கட்டப்பட்டதன் மர்மத்தை விலக்கியது. அதாவது, கட்டிட மூலப் பொருட்களை தன்னுடைய பிரெஞ்ச் முன்னாள் முதலாளி மாகிக்கு அவர் விற்பனை செய்திருந்தார்.[27]

31 மார்ச் 1741, இராணுவப் பொறியாளர் லெசுலோரன்ட்வின் தவறான நடத்தையை தைன் வான் கொல்லெனெசே ஏற்கனவே பதிவு செய்திருந்ததால், அதன்பேரில் அவர் லெசுலோரன்ட்டின் விலகல் கடிதத்தை பின்னாளில் கோரியிருந்தார்.[28] தலைமை மருத்துவர் மார்ட்டின் சார்ட்வுக்கு எதிராக லெசுலோரன்ட் கொடுத்த புகார் மனுவையும் மன்றம் விசாரணை செய்தது. லெசுலோரன்ட் உடனான தகராறில், சார்ட் அவரை போக்கிரி எனச் சொல்லி கத்தினார். இந்த தகராறு எப்பொழுது துவங்கியது என்றால், நடுஇரவில் சார்ட் கத்தியதை லெசுலோரன்ட் புகார் செய்ததால் ஏற்பட்டது. சார்ட்டை பொறுத்தளவில், அவரை அனைத்து வகையிலும் லெசுலோரன்ட் அவமானப்படுத்தத் துவங்கியதால் தகராறு தொடங்கியது. காக்கர்ட் சார்ட்விடம், அவருடைய மூத்த அதிகாரி லெசுலோரன்ட்டை போக்கிரி என அழைத்தது சரியில்லை என்றார். அதனைத்தொடர்ந்து, அவருடைய கலகம் செய்யும் குடிகார நண்பர்களை சார்ட்டுடைய விடுதிக்கு அழைத்துச் செல்வதற்கு காக்கர்ட் தடை விதித்தார்.[29]

லெசுலோரன்ட், மிகுந்த காழ்புணர்வோடு வாழ்வதற்காக தன்னையே கடிந்து கொண்டார். அவர், தளபதி பதவிக்கான மரியாதை, கௌரவம் ஆகியவற்றை அவதூறு செய்துவிட்டார். இந்த நடத்தையானது கோலர் மற்றும் வான் டேர் புரூகன் ஆகிய இரு சாட்சிகளால் நிருபிக்கப்பட்டது. இந்த குற்றச்சாட்டினைத் தவிர, லெசுலோரன்ட், கடந்த மூன்று வருடங்களாக கொச்சியில் இருந்தும், தூத்துக்குடியில் இருந்தும் இரட்டை சம்பளம் பெற்றிருப்பதும் தெரியவந்தது. அவர் நிர்வாகத்தை தவறாக வழிநடத்தியிருந்த நிலையில், இப்பொழுது அவர், அவருடைய சம்பளமானது சம்பளப்

*பாக்கிக்காகவே வழங்கப்பட்டது என்றார்.*[30] *திறமையின்மை, ஊழல் மற்றும் அவதூறு போன்ற குற்றச்சாட்டுகள், அவருடையப் பணிகளில் இருந்து அவரை வெளியேற்ற போதுமானதாக இருந்தன.*[31] *விரைவிலே, மே 1742–இல், லெசுலோரன்ட் மற்றும் அவருடைய ஆவணங்கள் அடங்கியவை வூத்கன்டோர்ப் கப்பல் மூலம் சிலோனுக்கு அனுப்பி வைக்கப்பட்ட நிலையில், அடுத்த அறிவிப்பு வரும்வரை அவர் அங்கேயே சிறை வைக்கப்பட்டார்.*[32]

## References:


1. Schmitz mentions i.e. Java's Northeast Coast in 1741 (J.P.G. Schmitz: Rechtshistorische bydragen tot de kennis van het materieele en formeelestrafrecht van loepassing op de diemaren van de Vereeuigde Oost-Indische Compaguie, voornamelijk betrekking hebeende op het delict van desertie (Utrecht, 1938), p. 73.
2. J. van Kan: Uit de rechtsgeschiedenis der Campagnied, tweede bundle. Rechtsgeleerd bedrijf in de builencomploiren (Bandung, 1935), p. 3.
3. Ibid., 150-6. In the eighteenth century juridical administration in Coachin was carried out with the help of a Rechishoekje, a compendium of laws, ill composed by an amateur for daily use in court.
4. NA, VOC 2581, "Resolution of the Quilon Council of War, 21 December 1741", ff. 6039-41.
5. NA, VOC 2581, "Letter of Captain Johannes Hackert to Batavia, 23 December 1741", ff. 7807.
6. NA, VOC 2561, "Letter of Coachin Council to Batavia, 21 March 1742", f. 144r.
7. NA, VOC 2581, "Resolution of the Quilon Council of War, 5 January 1742", ff. 6065-6.
8. NA, VOC 2561, "Letter of Coachin Council to Batavia, 21 March 1742", f. 143r.

9. NA, VOC 2561, “Letter of Coachin Council to Batavia, 21 March 1742”, f. 143v. The Dutch text is written in very prosaic terms which I will not withhold from the reader: Dal de E. Hackert niel lerugdeinsde alle degeene die in sijne pressentie ter requisitie van den fiscael hare verklaringen off interrogatoiren moelen b’eedigen lelijk uit te schelden en te vermaledije.
10. NA, VOC 2561, “Letter of Coachin Council to Batavia, 21 March 1742”, f. 145r.
11. NA, VOC 2581, “Resolution of the Quilon Council of War, 14 March 1742”, ff. 6205-7.
12. NA, VOC 2543, “Letter of Coachin Council to Batavia, 25 August 1741”, ff. 4041-2.
13. NA, VOC 2577, “Letter of Captain Hackert to Batavia, 19 March 1742”, ff. 134-5.
14. NA, VOC 2581, “Resolution of the Quilon Council of War, 27 March 1742”, ff. 6220-1.
15. NA, VOC 2581, “Resolution of the Quilon Council of War, 1 April 1742”, ff. 6231-2.
16. NA, VOC 2577, “Resolution of the Cochin Police Council, 14 May 1742”, ff. 239-40.
17. Johannes Thedens (died 1748) Governor-General of the Netherlands Indies from 1741 until 1743 (W. Wijnaendts van Resandt: De gezaghebbers der Oost-Indische. Compagnie op hare buiten-comtoiren in Azie (Amsterdam, 1944), p. 158).
18. This accusation or “declaratoir clagtschrift” has disappeared from the archives of the VOC. It is neither in the documents of the Chamber Amsterdam, nor in that of Zeeland. It is however remarkable that the table of contents is still preserved (NA, VOC 2581, “Letter of captain Hackert to Batavia, 30 April 1742”, ff. 7783-9).
19. NA, VOC 2581, “Letter of Captain Hackert to Batavia, 30 April 1742”, f. 7798.

20. NA, VOC 2678, “Letter of the Coachin Council to Batavia, 28 February 1746”, ff. 193-4.
21. NA, VOC 2581, “Letter of Captain Hackert to Batavia, 30 April 1742”, f. 7790.
22. NA, VOC 2577, “Letter of Captain Hackert to Batavia, 19 March 1742”, ff. 136-8.
23. NA, VOC 2561, “Letter of the Coachin Council to Batavia, 14 March 1742”, f. 184r.
24. He started in his new function in May 1743.
25. NA, VOC 2609, “Letter of Stein van Gollenesse and Siersma to Batavia, 31 December 1742”, f. 146.
26. NA, VOC 2577, “Resolution of the Cochin Police Council, 12 October 1741”, ff. 707-8.
27. NA, VOC 2581, “Letter of the Coachin Council to Batavia, 2 May 1742”, ff. 237-9.
28. NA, VOC 2581, “Letter of the Coachin Council to Batavia, 2 May 1741”, ff. 7565-6.
29. NA, VOC 2581, “Resolution of the Kanniyakumari Council of War, 9 September 1741”, ff. 7465-6.
30. NA, VOC 2577, “Resolution of the Cochin Police Council, 26 October 1741”, ff. 753-4.
31. Actually Stein van Gollenesse had contemplated this measure much earlier but had abstained from doing so, afraid of further delaying the building of Colachel (NA, VOC 2577, “Resolution of the Cochin Police Council, 12 October 1741”, ff. 705-6.
32. NA, VOC 2561, “Letter of the Coachin Council to Batavia, 14 May 1742”, ff. 183v-184r.

,

## அத்தியாயம் – 4

# டச்சுவின் வீழ்ச்சி (1741–1743)

குளச்சலில் டச்சு தோல்வியடைந்ததை ஆங்கிலேயர்கள் அவர்களுக்கு சாதகமாக எடுத்துகொண்டு கேரளாவில் உள்ள டச்சு கிழக்கிந்திய நிறுவனத்தின் வாணிபத்தை கையிலெடுக்கத் துவங்கினர். அவர்கள், படாவியாவை சைனா கைப்பற்றி விட்டதாகவும், டச்சுவின் அதிகாரம் கிட்டத்தட்ட முடிவுக்கு வந்துவிட்டதாகவும் வதந்தியைப் பரப்பினர்.[1] இதன்மூலம் கேரளா மன்னர்களுக்கு கிடைத்த யோசனை என்னவென்றால், டச்சுவினர் அதிகாரத்தை இழந்ததால், இனிமேல் அவர்களுடைய அரசியல் நோக்கங்களுக்கு தங்களைப் பயன்படுத்த முடியாது என்பதாகும்.

அக்டோபரில், மார்த்தாண்ட வர்மாவின் கோபத்திற்கு பயந்து கொச்சி மன்னர் திருவிதாங்கூருக்கு எதிரான கூட்டணியில் இருந்து விலகிக்கொண்டார். டச்சுவினர் பயங்கரமான குற்றத்தை செய்துவிட்டதால், உதாரணத்திற்கு, கோவில் பசுக்களை வெட்டியதால் அவர் அவர்களுக்கு கொடுத்த ஆதரவை விலக்கிக் கொண்டதுபோல் திருவிதாங்கூரிடம் நடித்தார்.[2] டச்சுவிடம் கொச்சி மன்னர் கூறியது என்னவென்றால், அவர் இப்பொழுது வயதானவராய் இருப்பதால் அவருடைய படையினை வழிநடத்த போதுமான வலிமை இல்லை என்பதாகும்.[3] இதைத்தவிர, அவருடைய செல்வங்கள் எல்லாம் காலியாகிவிட்டது என்றும், அவருடைய சேவகர்கள் போருக்கு இனிமேல் தயாராக இல்லை என்றும் கூறினார். இந்த சாக்குபோக்குளால் டச்சுவினர் ஈர்க்கப்படவில்லை என்பதால் கொச்சியை அச்சுறுத்தி, திருவிதாங்கூர்மீது கொண்டுள்ள கருணையை விட்டு விடுமாறும் எடுத்துரைத்தனர். இதனால், மன்னர் அதிக கவலையடைந்து, அவருடைய பிரபுக்களை சபையில் கூடுமாறு உத்தரவிட்டார். அதில் மிக முக்கியமாக, திருவிதாங்கூர் சார்பு

நிலையுடைய கொச்சியின் இரண்டாவது இளவரசரின் கீழுள்ள பாளையத்து அச்சன் மற்றும் ஆலன்காடு இளவரசர் ஆகிய இருவரும் வர மறுத்துவிட்டனர்.[4]

அதன்விளைவாகவே கொச்சி மன்னர் பின்வாங்கினார். கருணாகரப்பள்ளி மாடம்பிமார் அவர்களுடைய உயிருக்குப் பயந்து, விரைவாகவே இவர்களுக்குக் கொடுத்துவந்த ஆதரவினை விலக்கிக்கொண்டு திருவிதாங்கூரோடு இணைந்து கொண்டனர். இதனால், மார்த்தாண்ட வர்மாவுக்கு அவருடைய அன்பிற்குரிய சகோதரி ஒருமுறை ஆட்சிசெய்த பகுதியை மீட்டெடுப்பது எளிதாக இருந்தது. இருப்பினும், திருவிதாங்கூரை ஆதரித்ததற்காக மாடம்பிமார்களுக்கு வெகுமதி எதுவும் வழங்கப்படவில்லை. இதற்கு எதிர்மாறாக, நிர்வாகம் மற்றும் இராணுவச் செயல்பாடுகளை அவர்கள் இழந்தது மட்டுமின்றி, படிநிலையில் சாதாரண நாயர் நிலைமைக்கு தள்ளப்பட்டனர். திருவிதாங்கூரில் இருந்த எட்டுவீட்டுப் பிள்ளைமார், சில வருடங்களுக்கு முன்பாக, இதேப் பதவிக்காக கிளர்ச்சி செய்ததால் சாகடிக்கப் பட்டார்கள் என்பதுமில்லாமல் நிர்வாகம் திருவிதாங்கூர் பொதுப்பணியாளர் கொச்சு முசாட் என்பவரிடம் ஒப்படைக்கப்பட்டது.[5]

இதற்கிடையில், மதுரை மராத்திய ஆளுநர் அபய நாயக்கர் என்பவர் திருவிதாங்கூருக்கு எதிராக டச்சுவுடன் இராணுவக் கூட்டணி வைப்பதற்கான முயற்சியை கைவிடாமல் தொடர்ந்துகொண்டே இருந்தார். அக்டோபர் 27 அன்று, இரண்டு தூதுவர்கள் கொல்லம் வந்து சேர்ந்தனர். அவர்கள், வெள்ளி நாணயங்களால் நிரப்பப்பட்டிருந்த இரண்டு டிரங்குகளை (துணிகளை வைத்து பயணிகள் தூக்கிச் செல்லும் பெட்டி) திருவிதாங்கூருக்கு எதிரான கூட்டணியை அமைத்துக் கொள்வதற்காக தைன் வான் கொல்லெனெசேவிடம் வழங்கினர்.[6] இந்த புதிய சலுகைக்கான காரணம் எதற்கென்றால், ஆயிரம் குதிரைகள் படையையும், பல ஆயிரம் காலட்படையையும் அனுப்பி குளச்சலை முற்றுகையிட உதவி செய்ததற்கான தொகையை மதுரை படைக்கு திருவிதாங்கூர் மன்னர் செலுத்த மறுத்துவிட்டார்.[7] கோட்டையைக் கைப்பற்றிய பிறகு, அவர்கள் இனிமேல்

தேவைப்படமாட்டார்கள் என்பதாலும், அவர்களை வைத்திருப்பதால் மாதந்தோறும் ரூபாய் 60,000 செலவாகிறது என்பதாலும், மார்த்தாண்ட வர்மா அவர்களை மதுரைக்கு திருப்பி அனுப்பிவிட்டார். அவர்களுக்குப் பதிலாக நெடுமங்காடு, கருநாகப்பள்ளி, காயங்குளம் போன்ற பகுதிகளிலிருந்து வீரர்களை கொண்டுவந்தார்.[8] எனினும், தைன் வான் கொல்லெனேசேவுக்கு வழங்கப்பட்ட இந்த இரண்டாவது உதவியையும் அவர் அமைதியாகவே மறுத்துவிட்டார். மராத்தியர்களின் ஆதரவுக்கான விலை 25,000 பகோடா (உத்தேசமாக ரூ 87,500) என்பது மிக அதிகமே. இதைத்தவிர, அவர்கள்மீது டச்சுவினர் இதுவரையிலும் நம்பிக்கை கொண்டிருக்கவில்லை. அக்டோபர் 13 அன்று, மராட்டியர்களிடம் கூட்டணி வைத்துகொண்டு, திருவிதாங்கோடு போரிட வேண்டாமென ஏற்கனவே தூத்துக்குடி தலைமைக்கு கண்டிப்பான ஆலோசனைகளை புரூனிங் வழங்கியிருந்தார். மராத்தியர்களை புரூனிங், "புகழ்பெற்ற நம்பகத்தன்மையற்ற திருடர்கள்" எனக் கருதினார்.[9] நவம்பரில், பிரெஞ்சு கப்பல் ஒன்றுக்கு குளச்சலில் வரவேற்பு அளிக்கப்பட்டது. பசுக்கள், கோழிகள் மற்றும் வாழைப்பழங்கள் ஆகியன மூன்று பிகால் (375 பளு) சர்க்கரைக்கு பண்டமாற்ற முறையில் வழங்கப்பட்டன. பிரெஞ்சு தலைவருக்கு குளச்சலில் ஒரு தொழிற்சாலையை கொடையாக வழங்க திருவிதாங்கூர் முன்வந்தது. ஒருவேளை, அவர்களுக்கு போதிய வீரர்கள் இல்லாதபோது டச்சு கைதிகளை பிரெஞ்சுக்கு வழங்கவும் முன்வந்தனர். அதேவேளையில், பிரெஞ்சு தலைவர் திருவிதாங்கூரினரிடம், மாகியில் இருக்கும் தனது உயர் அதிகாரியின் ஒப்புதல் இல்லாமல், அவரால் எதுவும் செய்ய முடியாது என்று கூறினார்.[10] பிரெஞ்சுமீது மார்த்தாண்டவர்மா காட்டிய தாராளமான சலுகை, பிரெஞ்சு சார்புடைய பந்தளம் மற்றும் கோலத்ரி இளவரசர்களை கவர்ந்தது.

திசம்பரில், திருவிதாங்கூருக்கும் கொச்சி கோட்டைக்கும் இடையில் சமரசப் பேச்சு வார்த்தையை ஆங்கிலேயர்கள் துவங்கினர். டச்சுவின் வீழ்ச்சியினைப் பார்ப்பதற்கு முதலில் விசித்திரமாக ஆங்கிலேயர்களுக்கு தோன்றினாலும் குளச்சல்

தோல்வியை பயன்படுத்தி செல்வாக்குபெற்ற கடற்கரைப் பகுதிகளில் தமது நிலையை வலுப்படுத்த விரும்பினர். ஆனால், பிரெஞ்சினைக் கண்டு ஆங்கிலேயர்கள் பயந்தனர். தலச்சேரி தலைமை அதிகாரி வேக், அவருடைய பார்வையில் இரண்டு வழிகள் இருப்பதாக டச்சுவிடம் கூறினார். பிரெஞ்சுவின் உதவியை திருவிதாங்கூர் பெறுமாயின் திருவிதாங்கூர் மன்னரிடம் டச்சுவினர் அடிபணிய வேண்டும் அல்லது டச்சு பலகீனமாக இருக்கும். பிந்தைய விசயத்தில், நல்ல ஆலோசனையாக சமாதானத்தைத் தேர்வுசெய்ய வேண்டும்.[11]

சனவரி 1742–இல், திருவிதாங்கூர் மன்னர் புதிய போருக்கான காலங்களை கணக்கில் எடுத்துக்கொண்டார். 15 அன்று, அஞ்சுதெங்கில் அவர் ஆங்கிலேயர்களை சந்தித்து பலவகையான கனரக ஆயுதங்களை பெறுவதில் வெற்றிகண்டார். பிரெஞ்சுவும் பின்னோக்கி நின்று கொண்டிருக்கவில்லை. இப்பொழுதுதான் அவர்கள் நிலபிரபுவாகிய சக்திவாய்ந்த கோலத்திரி மன்னனின் வடகரை அல்லது வாழுந்நவர் இடத்தை அவர்கள் கைப்பற்றியது மட்டுமின்றி தெற்கில் மீண்டும் கவனம் செலுத்தத் துவங்கியுள்ளனர்.[12] சனவரி இறுதியில், அஞ்சுதெங்கு அருகில் திருவிதாங்கூர் மன்னரை டி லா போர்ட்டொனியா[13] என்பவர் சந்தித்தது மட்டுமின்றி, அவரிடம் 500 தீப்பொறி துப்பாக்கிகள், 36 பீப்பாய் வெடி மருந்துகள், 5,000 உலோகக் கற்கள், 1,000 துப்பாக்கிக் குண்டுகள், 100 வெடி குண்டுகள் ஆகியவற்றை விற்பனை செய்தார்.[14] அதன் விலையில் பாதியளவுக்கு திருவிதாங்கூர் மன்னர் அவர்களுக்கு மிளகுகளை வழங்கினார். அதேவேளையில், மதுரை மராத்திய ஆளுநருடன் திருவிதாங்கூர் பாதுகாப்பு ஒப்பந்தம் ஒன்றினை செய்துகொண்டது. 150,000 கலியான் பணத்தை (உத்தேசமாக ரூ 9,00,000) திருவிதாங்கூர் செலுத்திய பின்பாக, மஞ்சனோ சாகிப் தலைமையில் 300 குதிரைப் படையினரை திருவிதாங்கூரின் உதவிக்கு அனுப்பி வைத்தனர். இரண்டு வருடங்களுக்கு முன்பாக, அவருடைய மகனை டச்சுவுக்கு எதிரான போரில் மஞ்சனோ சாகிப் இழந்திருந்த நிலையில், தன்னுடைய மகனின் இழப்பிற்கு ஈடாக டச்சுவை பழிவாங்க வேண்டும் என்ற எண்ணத்தில் உறுதிமொழி எடுத்துக் கொண்டவர்.[15]

போருக்கான அவருடைய தாயாரிப்புகளுக்கு மத்தியிலும் அமைதிக்கான பாதையை மார்த்தாண்டவர்மா திறந்து வைத்திருந்தார். அவர் டச்சுவுடனான அமைதி ஒப்பந்தத்தில், அவர்கள் இனிமேல் தேசிங்கநாடுவுக்கு உதவி செய்யக்கூடாது என்கிற நிபந்தனையை விதித்தார். அதற்குப்பதிலாக, டச்சு கைதிகளை விடுவிக்க வேண்டுமென டச்சு அவர்களிடம் கோரியது.[16] இருதரப்பினரும் மற்றவரின் நிபந்தனை ஏற்கத்தகுந்தது அல்ல என முடிவு செய்தனர். இதனால், கொச்சி மன்னர் அல்லது அஞ்சுதெங்கு ஆங்கிலேயர் ஒருவர் நடுவராக இருந்து இந்த பிரச்சனைக்கு முடிவுகாண திருவிதாங்கூர் மன்னர் பரிந்துரை செய்தார். டச்சுவுக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை. ஆங்கிலேயர்கள், அவர்களுக்கு முக்கியமான போட்டியாளர்கள் மட்டுமின்றி, ஆத்திரமூட்டும் விதத்தில் அமைதிப் பேச்சுவார்த்தையில் நடந்துகொள்வர். கொச்சி மன்னர் வயதானவரும் பலகீனமானவரும் மட்டுமின்றி, பேச்சுவார்த்தையை வளர்த்துக் கொண்டே இருப்பார் என்பதால் நடுவராக இருக்க பொருத்தமில்லாதவர்.[17]

தைன் வான் கொல்லெனெசே கருத்துப்படி, திருவிதாங்கூர் மன்னருக்கு உண்மையிலே அமைதிப் பேச்சுவார்த்தையில் ஆர்வமில்லை. மார்த்தாண்ட வர்மா, டச்சுக் கைதிகளை திருப்பி அனுப்புவதை மறுப்பது மட்டுமின்றி, அவர் திரும்பத்திரும்ப புதிய நிபந்தனைகளைக் கூறிக்கொண்டு, தங்களது கைதிகளைத் திரும்பப்பெறுவதில் வெற்றிபெற வேண்டி டச்சுவினர் பேச்சு வார்த்தைகளை தொடங்குவதாகவும் குற்றம் சாட்டினார்.[18] இருப்பினும், மார்த்தாண்ட வர்மாவோடு சமாதானத்தை முடிவுக்குக் கொண்டுவரும் நம்பிக்கையை டச்சுவினர் விட்டுவிடாமல், அவரோடு பல தடவையாக பேச்சுவார்த்தைகளை தொடர்ந்தனர். 23 சனவரி, மார்த்தாண்ட வர்மாவை தைன் வான் கொல்லெனெசே எச்சரித்தது மட்டுமின்றி, அவரை சதி செய்து கொலை செய்துவிடுவதாகவும் மிரட்டினார்.[19] திசம்பர் 1741–இல் வாஞ்சி முத்தன் மூலம் சதி திட்டம் தீட்டிய நிலையில், வாஞ்சி முத்தன் டச்சுவினரிடம் திருவனந்தபுரம், கிளிமானூர், ஆற்றிங்கல் ஆகிய பகுதிகளிலுள்ள குடியிருப்புவாசிகளுக்கு கடினமான வரி விதிக்கப்பட்டு இருப்பதாகவும், போருக்காக அதனை செலுத்த வேண்டுமென

மன்னர் உத்தரவிட்டிருப்பதாகவும் டச்சுவிடம் தகவல் தெரிவித்தார்.[20] அதேவேளையில், தைன் வான் கொல்லெனெசே உத்தரவின்பேரில், மூன்று டச்சு படைப் பிரிவினரும், 3,000 தேசிங்கநாடு படை வீரர்களும் கொல்லத்தில் இருந்து அணிவகுத்து ஆற்றிங்கல் அருகிலுள்ள கிளிமானூருக்கு வந்தனர். ஆற்றிங்கல், அவர்களால் கைப்பற்றப்பட்ட பகுதியாகும்.[21]

பிப்ரவரி 1, மேற்கொண்டு பேச்சுவார்த்தை நடைபெறும் வரை, அதாவது ஆறு வாரங்கள், டச்சுவும் திருவிதாங்கூரும் போர் நிறுத்தம் செய்ய ஒப்புக்கொண்டன. இரண்டு வாரங்கள் கழித்து, பிப்ரவரி 15 அன்று, திருவிதாங்கூர் மன்னருக்கு ஓர் சமாதான உடன்படிக்கைக்கான வரைவினை டச்சு அனுப்பியது. அதில், உடனடியாக அனைத்து டச்சுக் கைதிகளையும் விடுவிக்க வேண்டும் என்றும், குளச்சலில் பிடிபட்ட அனைத்து ஆயுதங்களையும், ஆவணங்களையும் திருவிதாங்கூர் ஒப்படைக்க வேண்டும் எனவும் குறிப்பிட்டிருந்தனர். திருவிதாங்கூர் மன்னர் டச்சுவுக்கு ஆண்டுதோறும் 1,000 சாக்குகளில் மிளகுகளை வழங்க வேண்டும் மற்றும் இரண்டு தொழிற்சாலைகளை குளச்சலிலும் தேங்காப்பட்டணத்திலும் கட்டுவதற்கு ஒப்புக்கொள்ள வேண்டும். அவை இரண்டும் மன்னரின் செலவில் கட்டப்பட வேண்டும். டச்சு, சுதந்திரமாக வர்த்தகப் பொருட்களை கொண்டு செல்லும் வகையில் பிற ஐரோப்பிய நாடுகளை வெளியேற்ற வேண்டும். இதைத்தவிர, திருவிதாங்கூர் மன்னர் 1694–இல் தேங்காப்பட்டணத்தை கொள்ளை அடித்ததன்மூலம் ஆற்றிங்கலுக்கு கடன் பட்டிருப்பதால், அதற்கு இழப்பீடு வழங்க வேண்டும். மேலும், நடுநிலையான ஆணைக் குழுவானது திருவிதாங்கூர் தேசிங்கநாடு மோதல்களை விசாரிப்பது மட்டுமின்றி, திருவிதாங்கூரில் கிறித்தவர்கள் வாழும் பகுதிகளை டச்சுவின்கீழ் அனுமதிக்க வேண்டும் என உரிமை கோரியது.[22]

17 பிப்ரவரியில், அஞ்சுதெங்குவில், திருவிதாங்கூர் மன்னரின் ஆதரவாளரான போகு மூசா என்பவர் டச்சு சார்பில் வருகைப் புரிந்திருந்த எசக்கியல் ராபியை முதல் கூடுகையிலே சந்தித்தார்.[23] போகு மூசாவின் கருத்துப்படி,

அவர்களுடைய வரைவு ஒப்பந்தத்தில் டச்சு அதிகமாகவே கோரியிருந்தது. ஒரேயொரு விதிவிலக்குடன், அதாவது ஓடுகாலியாய் வந்து அவர்களிடத்தில் பணியில் சேர்ந்தவர்களின் விருப்பத்தின்பேரில் விடுதலை செய்ய திருவிதாங்கூர் தயாராக இருக்கிறது. அவர்களை வலுக்கட்டாயமாக கொச்சிக்கு திரும்ப அனுப்பினால், நிச்சயமாக அவர்கள் தூக்கிலிடப்படலாம். மன்னரின் பீரங்கிகளுக்கும், துப்பாக்கிகளுக்கும் இழப்பீடு வழங்குவதாக இருந்தால் டச்சு கிழகிந்திய நிறுவனத்திடமிருந்து கைப்பற்றப்பட்ட ஆயுதங்களை திரும்ப வழங்கலாம் எனக் கூறினார். குளச்சலில் கைப்பற்றப்பட்ட பணம் மற்றும் நிறுவனத்தின் ஆவணங்களை குறித்து அவர் வாய் திறக்கவில்லை. ஆண்டுதோறும் ஆயிரம் சாக்கு மிளகு கொடுப்பதற்கு அவர் ஒத்துக்கொண்டார். அதற்கு அவர்கள் 800 சாக்குகளுக்கு பணமும், மீதி பணத்திற்கு தீப்பொறி துப்பாக்கிகள், ஈயங்கள், குண்டுகள் மற்றும் வெடி மருந்துகள் போன்றவற்றை திருவிதாங்கூருக்கு வழங்க வேண்டும் என்றார்.[24] அவர்களுடைய முன்னவர்கள் நடத்திய போரினால் ஏற்பட்ட இழப்பீட்டினை டச்சு வழங்காததுவரை, தேங்காப்பட்டணம் டச்சு தொழிற்சாலையை மறுசீரமைப்பு செய்வதற்கான தொகையை வழங்க மார்த்தாண்டவர்மா மறுத்துவிட்டார். அவர் மேலும், கிறித்தவர்கள்மீது டச்சு அதிகாரம் செலுத்தும் எல்கையை மறுத்துவிட்டார்.[25] அவர்கள், மன்னருடைய ஆளுகைக்கு உட்பட்டவர்கள் மட்டுமின்றி, அவர்கள் பிராமணர்களின் கோவில் ஆளுகைக்கும் உட்பட்டவர்கள் ஆவர். அவர்களைக் குறித்துப் பேச டச்சுவுக்கு எதுவும் இல்லை. முடிவாக போகு மூசா டச்சுவிடம், கருநாகப்பள்ளி, நெடுமங்காடு மற்றும் அங்கு உற்பத்தியாகும் எல்லா மிளகுகளும் திருவிதாங்கூர் மன்னருக்கு உரிமையானது எனக் கூறினார். அவர் மேலும் தெளிவாகக் கூறியது என்னவென்றால், மேலே சொல்லப்பட்ட நடுநிலை தவறாத விசாரணைக் குழுவை மன்னர் நிராகரித்துவிட்டார்.[26] போகு மூசா வரையறுத்தி கூறியதில், திருவிதாங்கூர் மன்னரைப் பொறுத்தளவில் டச்சினர் வர்த்தகர்கள் மட்டுமே, அவருடைய சொந்த வியாபாரிகளைவிட மேலாகக் கருதுவதில்லை. அவர் கூடுதலாகவும் கிண்டலாகவும் டச்சுவிடம், வர்த்தகர்கள் கேரள

அரசியலில் தலையிட உரிமையில்லை என்கிற கொள்கையானது கிழக்கிந்திய நிறுவனத்தில் 1739–இல் வான் இம்காப் இருந்ததுவரை பின்பற்றப்பட்டு வந்தது என்றார். அதில், அதிருப்தியடைந்த ராபி, கொச்சிக்குச் சென்று, திருவிதாங்கூர் தூதுவரின், “மிருகத்தனமான மற்றும் திமிரான முன்மொழிவுகள்” குறித்துப் புகார் செய்தார்.[27]

21 பிப்ரவரி, உடல்நலக் குறைவால் தைன் வான் கொல்லெனெசே கிளிமானூரில் இருந்து கொச்சி திரும்பிவந்து, உயர் அதிகாரிக்குரிய உத்தரவிடும் அதிகாரத்தை தலைவர் பெர்கரிடம் வழங்கினார்.[28] பின்னர் நடந்தது யாதெனில், வற்கலை மலையின் அருகிலுள்ள வெச்சூரை 12,000 திருவிதாங்கூரினர் கைப்பற்றிய நிலையில், டச்சுவின் கோட்டையான கொலாண்டியாவில் (ஆய்ரூரில்) இருந்து டச்சுவின் முக்கியப் படையைத் திரும்பப்பெற முடிவு செய்தார். வெச்சூர் கைப்பற்றப்பட்ட நிலையில், டச்சுவின் ஆளுகையின்கீழ் பலமாக இருந்த ஆய்ரூர், தொட்டக் கோட்டை, கிளிமானூர் மற்றும் பரவூர் ஆகிய அனைத்து டச்சு கோட்டைகளுக்கும் திருவிதாங்கூர் இராணுவத்திடம் இருந்து மிரட்டல் வந்தது.[29]

இதற்கிடையில், மதுரை மராத்திய ஆளுநரிடமிருந்து அதிக இராணுவ உதவிகளை பெறுவதற்கு மார்த்தாண்டவர்மா முயன்றார். அத்தகைய கூட்டணியை முறியடிப்பதற்காக டச்சு மற்றும் தேசிங்கநாடு ஆகிய இருவரும் மதுரை ஆளுநருக்கு திருவிதாங்கூரில் பணிவிடை செய்த 2,000 வீரர்களை பரிசாக அனுப்புவதாகக் கூறினார்.[30] பல நாட்களுக்குப் பின்பாக, டச்சுவும் தேசிங்கநாடும் மதுரை ஆளுநருக்கு அவர்களுடைய பரிசுகளை அனுப்பி வைத்த நிலையில், மார்த்தாண்டவர்மா அவருக்கு 100,000 கலியான் பணம் (உத்தேசமாக ரூ 600,000) மற்றும் ஓர் யானையை அனுப்பி வைத்தார். திருவிதாங்கூர் மன்னர் மதுரை ஆளுநரிடம், 500 குதிரை வீரர்களையும், 1,000 காலாட் படையினரையும் அனுப்பி நெடுமங்காடுவை கைப்பற்றுவதற்கு உதவிட வேண்டுமென்றும், கூலிப் படைகளுக்கான தொகையை அவரே செலுத்தி விடுவதாகவும் கூறினார். இதற்கும் மேலாக, திருவிதாங்கூர் மன்னர், சிறந்த கொடையாக, 300,000 கலியான் பணம் (உத்தேசமாக

ரூ1,800,000) மற்றும் அன்பளிப்பாக 50,000 கலியான் பணம் (உத்தேசமாக ரூ 300,000) தருவதாக உறுதியளித்தார்.[31] ஆனால், நெடுமங்காடுவை திருவிதாங்கூர் கைப்பற்றுவது விருப்பக் குறைவாக அபய நாயக்கருக்கு தென்பட காரணம் என்னவென்றால், அத்தகைய நிகழ்வுக்குப் பிறகு அங்கிருக்கிற வியாபாரிகள் யாரையும் தன்னுடைய எல்கையில் வியாபாரம் செய்ய அனுமதிக்கமாட்டார் என்பதே. அதனால் அவர், திருவிதாங்கூரின் கோரிக்கைக்கு மாறாக, அவருடைய நாட்டில் ஏற்கனவே குதிரைப்படையில் இருக்கிற வீரர்களைப் பயன்படுத்தும்படி மாத்தாண்ட வர்மாவுக்கு புத்திமதி வழங்கினார்.[32]

இதில் தெரிவது என்னவென்றால், அதைத்தான் ஏற்கனவே மார்த்தாண்டவர்மா செய்துவருகிறார். அவர், குதிரைப் படையில் போதுமானளவு மறவர்களை சேர்த்தவுடனே, வடக்கில் அவர் இரண்டாவது முறையாக போரை முன்னெடுத்தார். 21 மார்ச், தேசிங்கநாடுவின் பாரம்பரியமான காயங்குளம் ஆட்சிக்கு உட்பட்ட பகுதிக்குள் அவரே படையெடுத்து வந்ததை பார்த்ததாக டச்சுவின் அறிக்கை கூறுகிறது.[33] இதன்காரணமாக நெடுமங்காடு உடனான கூட்டணி போதியளவு பலகீனம் அடைந்தது.

டச்சுவினருக்கு வலுவூட்டும் வகையில் புதிய உதவிகள் எதுவும் கிடைக்கப் பெறாமல் போனதற்கு, சீனர்கள் படாவியாவை அச்சுறுத்திக் கொண்டிருந்ததால் புறக்காவலாக இருக்கும் மலபாரைவிட அவர்களுக்கு படாவியா முக்கியமானதாக தோன்றியது.[34] மேலும், திருவிதாங்கூருக்கு எதிரான தொடர் போரால் அவர்களுடைய வர்த்தகம் பாதிக்கப்பட்டு இருந்தது. தேசிங்கநாடு மற்றும் கொச்சி மன்னர் ஆகிய இருவரும் அவர்களுடைய வியாபாரிகளிடம் மிளகினை விற்பனை செய்துவிட்டு, அதனை கூடுதல் விலைக்கு டச்சுவிடம் விற்பது என்பது டச்சுவோடு செய்துகொண்ட ஒப்பந்தத்தை மீறிய செயலாகும். மேலும், திருவிதாங்கூரின் துறைமுகங்களை டச்சு தடுத்தபோதும், கொச்சி மற்றும் தேசிங்கநாடு வியாபாரிகள் வர்த்தகத்தை திருவிதாங்கூர் வழியாகவும், திருவிதாங்கூரினர் மலைகளைத் தாண்டி, அவர்களுடைய பொருட்களை கோரமண்டல் கடற்கரையில்

விற்பனை செய்து வந்தனர். இந்தவித செயல்பாடுகளுக்கு எதிராக டச்சுவால் எதுவும் செய்ய இயலவில்லை.[35] அவர்களுக்கு மனிதவளம் குறைவாக இருந்ததால், அவர்களுடைய கூட்டாளிகளை சார்ந்து இருக்க வேண்டியதாய் இருந்தது.

இன்னொரு வகையில், டச்சுவிடமிருந்து தேசிங்கநாடு அனுகூலத்தைப் பெற விரும்பியது. மே அன்று, 2,000 ரிச் டாலரை (உத்தேசமாக ரூ.3,560) டச்சு செலுத்தவில்லை என்றால் தான் பின்வாங்கி விடுவதாக அவர் மிரட்டினார்.[36] அவருடைய பணத் தேடலால் மாடாம்பிமார் போன்று தேசிங்கநாடுவும் பிரபலமாக முடியவில்லை. ஆற்றிங்கலில் நடைபெற்ற இராணுவ நடவடிக்கையின்போது, அவருடைய இராணுவத்தின் வருகை விவசாயிகளுக்கு உதவியாக இருக்குமென அறிவித்தார். பெரிய அளவில் பணத்தை கொடுப்பதன் மூலம் கொள்ளை ஆதாயங்களை அவர்களால் தடுக்க முடியும். இவ்விதமாக செலுத்தும் பணம், சில வேளைகளில் வீரர்களை வஞ்சக வழியில் அணிவகுப்பதற்கு வழிவகுத்து விடுகிறது என்றார். தேசிங்கநாடு, எட்டு நாட்களுக்கு ஒருமுறை அவருடைய போர் வீரர்களை மாற்றிக் கொண்டிருந்ததால் அவர்களுக்கு எதுவும் கொடுக்க வேண்டிய தேவை எழவில்லை. பழைய பழக்கவழக்க ஒப்பந்தமுறையில், குறிப்பிட்ட காலம் முடிவடைந்தபிறகு ஊதியம் செலுத்த வேண்டியது கடமையாகும்.[37] இதில், அதிருப்தியுற்ற மாடாம்பிமார் இப்பொழுது தேசிங்கநாடுவின் இரண்டாவது இளவரசருக்கு ஆதரவு அளித்தனர். முதல் இளவரசரின் இளைய சகோதரரான இந்த இளவரசர் கொல்லம் ஆளுநரும் ஆவார். இவர், மார்த்தாண்ட வர்மாவிடம் இரகசிய தொடர்பு வைத்திருந்த நிலையில், கூட்டாளி படைகளின் யுத்தத் தந்திரம் குறித்த தகவல்களை மன்னருக்கு அளித்து வந்தார். அவரைப் பற்றி டச்சு எழுதியதாவது:

> “அவருடைய உடல் தொழுநோயால் அருவருப்பாகி விட்டது மட்டுமின்றி ஒவ்வொரு இரவும் மனநலம் குன்றி திருவிதாங்கூர் முகாமிற்கு இரகசியங்களை அனுப்பிக் கொண்டிருப்பதால் அவர்களுக்கு நமது திட்டங்கள் தெரிந்திருக்கிறது”.[38]

மார்ச் இறுதியில், கிளிமானூரில் உள்ள டச்சுக் கோட்டை திருவிதங்கூரால் முற்றுகையிடப்பட்டது. மேற்பார்வையாளர் கார்ல் ஆகத்து டியூவன்சாட் மற்றும் ஓடுகாலிகளான இதர 10 நபர்கள் கோட்டையின் முன்பாக நான்கு பீரங்கிகளை வைத்தனர்.[39] கடலோரப் பகுதிகளில் உள்ள தொட்டக்கோட்டை, ஆய்ரூர் மற்றும் பரவூர் ஆகியவைகளை பிடிப்பதற்கு டியூவன்சாட் திட்டமிட்டுள்ளார் எனக் கூறப்பட்டது.[40]

ஏப்ரல் 5, கிளிமானூரில் உள்ள தேசிங்கநாடு படைகளில் இருந்து ஏராளமானோர் விலகிவிட்டனர். இந்த நிகழ்வானது டச்சு ஆவணத்தின்படி, முதல் டச்சுப் படை இயங்கியபோது அவர்களில் திரளானபேர் எதிர்தரப்போடு இணைந்து கொண்டனர். நாயர்கள் மத்தியில் பயம் பெரிதாக இருந்ததால், அவர்களில் 10 பேர்கூட ஒன்றாக தங்கியிருக்கவில்லை.[41] திருவிதாங்கூர் இராணுவம் இரண்டு சிறு பீரங்கிகளையும், மூன்று பாதகைகளையும் கைப்பற்றினர். தேசிங்கநாடு குழப்பம் அடைந்த நிலையில், சிறிய படையுடன் நள்ளிரவில் கிளிமானூரில் இருந்து தப்பி தொட்டக்கோட்டை சென்றடைந்தார். இதேப்போல் இரண்டு நாட்களுக்குப் பின்பாக, எண்ணிக்கையில் வலுவான இராணுவத்தை டச்சு எதிர்கொள்ள நேரிட்டதால் தொட்டக்கோட்டையில் இருந்து பின்வாங்கியது. அங்கு நிலவிய சூழ்நிலைகள் மிகவும் சிறப்பாக இல்லாததால் ஏப்ரல் மத்தியில் பெரிய அளவிலான அத்தியாவசியப் பொருட்களையும், வெடிப் பொருட்களையும் அங்கேயே விட்டுவிட்டு ஆய்ரூரில் இருந்து டச்சு விலகிச்சென்றது.[42]

நாட்டில் எந்தவொரு அதிகாரத்தையும் செயலுக்கு கொண்டுவராத இளவரசியைப் பற்றி நெடுமங்காடுவிலுள்ள மாடாம்பிமார் கவலைப்படவில்லை. மேலும், அரியணையில் இருந்த இளவரசியை அவர்கள் தகுதிநீக்கம் செய்தனர். பல நாடுகள் டச்சுவுக்கு கொடுத்த தகவல் என்னவெனில், அவளால் திறமையாக ஆட்சி செய்ய முடியாது எனக் கருதுவதாகக் கூறினார்கள். இளவரசியின் உடன்பிறந்த சகோதரரின் மகனை கவித்துவமாக அவளோடு ஒப்பிடுகையில் சூரிய ஒளியில் பிரகாசிக்கும் அழகான வைரமாக இருந்தாலும்,

அந்த வைரம் எதிர்பாரதவிதமாக ஒளியை இழப்பதற்கு பல தவறான ஆலோசகர்கள் அவர்களது நிழலை அதன்மேல் படிந்திருந்தார்கள்.[43] திருவிதாங்கூரின் வெற்றியைப் பார்த்து, நெடுமாங்காடுவைச் சார்ந்த பத்து மாடம்பிமார் தங்களை மார்த்தாண்ட வர்மாவின்கீழ் உட்படுத்திக் கொண்டனர். விரைவிலே, ஏப்ரல் 13–க்கு முன்பாக, நெடுமங்காடு மற்றும் கொட்டாரக்கரை தேசங்களின் தலைநகரங்களை திருவிதாங்கூரினர் கைப்பற்றினர்.[44]

நெடுமங்காடுவை கைப்பற்றிய பின்பாக திருவிதாங்கூர் இராணுவம் ஆய்ரூர்க்கு அணிவகுத்தது. அப்பகுதிகளில் வசித்த குடியிருப்பாளர்கள் கொல்லத்திற்கு தப்பிச் செல்ல வேண்டும் அல்லது தங்களை திருவிதாங்கூருக்குள் உட்படுத்திக் கொள்ள வேண்டும். ஆய்ரூரில் டச்சுவுக்கு மோசமான எச்சரிக்கை உள்ளாகி இருந்ததற்கு, அவர்களுக்கு உணவு வழங்குவது நிறுத்தப்பட்டதால் தளபதி கொல்லத்தில் இருந்து திரும்பிச் செல்வதற்கு விருப்பமுறச் செய்வர் எனக் கருதினர்.[45] ஆனால் இது மிகவும் தாமதமானதாக இருந்தது. ஆய்ரூர் மற்றும் பரவூர் ஆகியவை டியூவன்சாட் கீழிருந்த திருவிதாங்கூர் படையினரால் முற்றுகையிடப்பட்டுவிட்டன. 1742 மே தொடக்கத்தில், இரண்டு கோட்டைகளும் எந்தவித எதிர்ப்புமின்றி கைப்பற்றப்பட்டன. கொலாண்டியோ (ஆய்ரூர்) மதிற்சுவர் அருகில், திருவிதாங்கூரில் பணி செய்வதற்காக மூன்று டச்சுவினர் தளபதியை சந்திப்பதற்கான கோரிக்கையை முன்வைத்தனர். அவர்கள், சுதந்திரமாக பயணிக்க வழிவகை செய்யப்படும் என்கிற நிபந்தனையின் பேரில் சரணடைந்தனர். ஒருமுறை கோட்டையின் வெளியே அவரும் அவருடைய வீரர்களும் போர்க் கைதிகளாக கைது செய்யப்பட்டனர்.[46] அதுபோல், இங்கேயும் குளச்சலில் சரணடைவதற்கு இணையாக நாம் பார்க்கிறோம். அங்கேயும் சுதந்திரமாகப் பயணிப்பது உறுதிபடுத்தப்பட்ட நிலையில் டச்சு வீரர்கள் வெளியே சிறைபிடிக்கப்பட்டனர்.

டச்சு கிழக்கிந்திய நிறுவனம், நெடுமங்காடுவில் உள்ள தன்னுடைய அனைத்து கோட்டைகளையும் இழந்தபோது, அவை அனைத்தும் மார்த்தாண்ட வர்மாவின் கைகளுக்குள் வந்துவிட்டன. அவர்கள் கொல்லத்தில் இருந்து பின்வாங்கி,

திருவிதாங்கூரினரின் தாக்குதலுக்காக காத்திருந்தனர். டியூவன்சாட் அறிவுறுத்தலின்படி மார்த்தாண்ட வர்மா கொல்லம் மற்றும் கொச்சி ஆகிய இரண்டையும் முற்றுகை இடப்போவதாக வதந்தி பரவியது.[47] இப்பொழுது, கொச்சியில் இருந்த தைன் வான் கொல்லெனெசே, அபாயத்தை உணர்ந்து நிலையில் படையை வலுவூட்டும் விதமாக 2,000 வீரர்களை படாவியாவிலிருந்து அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொண்டார்.[48] டச்சுவின் அதிகாரத்தை கேரள இளவரசர்கள் கிண்டல் செய்தாலும், இது எண்ணிக்கையில் வலுவூட்ட வேண்டியது மட்டுமல்ல, உளவியல் ரீதியான விசயமும் ஆகும். உதாரணத்திற்கு புறக்காடு இளவரசர், அவரின் ஆட்சிக்கு உட்பட்டவர்களிடம் டச்சுவுக்கு சரக்குகள் கொடுப்பதனை தடை செய்ததுமில்லாமல் புறக்காடுவுக்கு வந்திருந்த காயங்குளத்திலுள்ள டச்சு குடியுரிமையாளரை கைது செய்ய உத்தரவிட்டதால், அவருடைய சொத்துக்களை பறிமுதல் செய்யப்பட்டன.[49]

இதற்கிடையில், தெக்கும்கூரிலுள்ள திருவில்லா பகோடாவுக்கு தேசிங்கநாடு தப்பிச்சென்றார். அந்த இடமானது கொச்சி மன்னரின் எல்லைக்கு உட்பட்டதாகும்.[50] தேசிங்கநாடு, திருவில்லாவையும் பாதுகாப்பானதாக உணராததால் அங்கிருந்து கொச்சிக்கு தப்பிச் சென்றார். இதற்கிடையில், அவர் ஒரு பிராமணரை மார்த்தாண்ட வர்மாவிடம் அனுப்பி, அவரின்கீழ் இருப்பதற்கான உத்தரவை பேச்சுவார்த்தை மூலம் நாடினார். அதில் மிக முக்கியமான நிபந்தனையாக, அவருடைய பரம்பரை நிலங்களை மீட்டெடுப்பதற்கான அனுமதியை தேசிங்கநாடு கேட்டிருந்தார். இதற்கு திருவிதாங்கூர் அனுமதி அளிக்கவில்லை என்பது மட்டுமின்றி பேச்சு வார்த்தைக்கான நேரத்தை செலவு செய்யாமல், தேசிங்கநாடு இளவரசரை பிடிக்க விரும்பியது.[51] தேசிங்கநாடுவை பிடிப்பதில் வெற்றியடையாத மார்த்தாண்ட வர்மா, காயங்குளத்தில் உள்ள அவருடைய பரம்பரை நிலங்களை பாழாக்கிட டியூவன்சாட்டுக்கு உத்தரவு பிறப்பித்தார். எல்லா தேவாலயங்களையும், கோபுரங்களையும், அரண்மனைகளையும் எரித்தது மட்டுமின்றி, அனைத்து மரங்களையும் வெட்டிச் சாய்த்ததால், அங்கு குடியிருந்தவர்கள் பயத்தில் உறைந்தனர்.[52]

ஜூன் 13, 1742 கொல்லம் மட்டுமே தாக்குதலுக்கு உள்ளாக்கப்பட்டது. டியூவன்சாட் தலைமையின்கீழ் மார்த்தாண்ட வர்மாவுக்கு மெய்காப்பாளர்களாக உருவாக்கப்பட்ட, நன்கு பயிற்றுவிக்கப்பட்ட 1,000 வீரர்கள் முற்றுகையில் ஈடுபட்டனர். டியூவன்சாட் என்பவரால் முறையான படைப்பயிற்சி பெற்ற அவர்கள் ஆடையிலும், ஆயுதத்திலும் ஐரோப்பியர்களைப் போன்று காட்சியளித்தனர். அவர்கள் குஞ்சு குடிகள் (சிறிய குத்தகையாளர்கள்) என அழைக்கப்பட்டது மட்டுமின்றி, அவர்கள் திருவிதாங்கூரின் உயர் அடுக்குப் படைகளாக இருந்தனர்.[53]

புறக்காடு இளவரசர் திருவிதாங்கூரினருக்கு சுதந்திரமாக பயணிக்க அனுமதி வழங்கியிருந்தது எதற்கெனில் அவர்கள் விரைவாக தேசிங்க நாடுவை தாக்கவேண்டும் என்பதற்காகத்தான். இதைத்தான் பந்தளம் இளவரசர் முன்பு செய்தார். தேசிங்கநாடு மற்றும் டச்சுவை எதிர்ப்பதற்கும், மார்த்தாண்ட வர்மாவுக்கு வலுவூட்டும் வகையில் உதவி செய்யும்பொருட்டு புறக்காடு இளவரசர் மேலும் 50 பெரிய படகுகள், வீரர்கள் மற்றும் பித்தளை பீரங்கிகள் ஆகியவற்றை அனுப்பி வைத்தார். அவர் மேலும், திருவிதாங்கூருக்கு மரியாதை செலுத்துமாறும் கொச்சி மன்னருக்கு அறிவுரை வழங்கினார்.[54] கொச்சி மன்னர் அதனை மறுத்தபோது, அவருக்கு அருகிலுள்ள எல்லையை களிமண்ணால் உயரமான சுவர்களாக எழுப்பிப் பலப்படுத்திவிட்டு கொச்சி படை உள்நுழைவதை தடுப்பதுபோல் பாசாங்கு செய்தார்.[55]

தென்பகுதியில், அவருக்கு அருகாமையிலுள்ள திருவிதாங்கூர் மற்றும் புறக்காடு ஆகியோரின் அச்சுறுத்தலால் அமைதி குன்றிய கொச்சி மன்னர் அவரது அரச பதவியினை விட்டு விலகி, திருவிதாங்கூர் சார்புடைய தனது இரண்டாவது மருமகனுக்கு அரியணையை கொடுத்திட முடிவு செய்தார். இதுகுறித்து, அவநம்பிக்கையுடைய இந்த மனிதர் திருவிதாங்கூருடன் தொடர்பில் இருப்பதற்காக, சமாதானப் பேச்சுவார்த்தை மூலம் பாசாங்கு செய்கிறார் என்பதனை சொல்ல வேண்டிய தேவை டச்சுவுக்கு இருக்கவில்லை. திருவிதாங்கூர் தரப்பினை கொச்சி தேர்வு செய்தால், தங்களுக்கு உணவும் ஆயுதமும் வழங்குவதிலிருந்து அவர்கள்

பின்வாங்கிவிடுவார்கள் என டச்சுவினர் பயந்தார்கள். திருவிதாங்கூரினர், பீரங்கிகளை வைபின் தீவுவில் வைத்து, நகரை எரித்து விடுவார்கள் என தைன் வான் கொல்லெனெசே பயந்தார்.[56] சூலையில், கொல்லம் கோட்டை முற்றுகையிட்டபோது டச்சுப்படைகள் கிளர்ச்சியின் விளிம்பில் சென்றதற்கு காரணம் என்னவெனில், திருவிதாங்கூரில் ஓடுகாலியாய் போய் சேர்ந்தவர்களுக்கு கிடைக்கிற சரியான ஊதியமும், மரியாதையும் டச்சுப் படையினருக்கு கிடைக்கவில்லை.[57] வலுவூட்டும் வகையில் உதவிகள் எதுவும் படாவியாவில் இருந்து வரவில்லை. அவர்களுடைய அரசுக்கு எதிராக சைனர்கள் எழுச்சியுற்று வந்ததால் டச்சுவினர் தங்களுடைய படைகளின் கவனத்தை சாவாவின்மீது செலுத்தினர். படாவியாவின் உயர்மட்டக் குழுவானது திருவிதாங்கூருக்கு எதிரான போரை முடிவுக்கு கொண்டுவர விரும்பியதால், மார்த்தாண்ட வர்மாவோடு சமாதானம் செய்துகொள்ள கொல்லெனெசேவுக்கு அழுத்தம் கொடுத்தது. இன்னும், கொல்லம் நகரை தேசிங்கநாடு படைத்தலைவர் அச்சுத வாரியார் தலைமையில் 3,000 வீரர்கள் துணிவுடன் பாதுகாத்து வந்தனர். இந்நிலையில், திருவிதாங்கூரினர் நிலம் வழியாக கொல்லத்தை முற்றுகையிட்ட போதும் அவர்களால் தலைநகரத்தைப் கைப்பற்றுவதில் வெற்றிகொள்ள முடியவில்லை. முற்றுகையின்போது ஆறாயிரத்திற்கு மேற்பட்ட வீரர்கள் கொல்லப்பட்டதால் திருவிதாங்கூர் இராணுவம் மிகப்பெரிய இழப்பால் பாதிக்கப்பட்டது.[58] மார்த்தாண்ட வர்மா ஆங்கிலேயர்களிடம், முற்றுகையை தொடர்வது குறித்த அவர்களது கருத்தினை கேட்டார். அவர்கள் அவரிடம் சமாதானமாக முடித்துக்கொள்ள அறிவுரை வழங்கியதோடு, வான் இம்காப் கேரளாவுக்கு திரும்பிவர திட்டமிட்டுள்ள தகவலையும் தெரிவித்தனர்.[59] அதன்காரணமாக, சூலை மாத முடிவில் மார்த்தாண்டவர்மா கொல்லத்தில் இருந்து படைகளை திரும்பப் பெற்றார்.

அது சண்டைக்கான முடிவாக இருந்தது. ஆங்கிலேயர்களின் அறிவுரைக்கு மேலாக, கொல்லத்திலிருந்து பின்வாங்குவதற்கு வேறு காரணங்களும் இருந்தது. முதலாவதாக, பிரெஞ்சுவினர் இராணுவ உதவி செய்வதாக

அளித்த வாக்குறுதி தோல்வி அடைந்தது. மாகி மராத்தியர்களால் அச்சுறுத்தலுக்கு உள்ளாகியதே அதற்குக் காரணமாகும்.[60] இரண்டாவதாக, டியூவன்சாட் வெப்பமண்டல நோயால் பாதிக்கப்பட்டதால், திருவிதாங்கூர் படைகளை சரியான முறையில் வழிநடத்திட இயலவில்லை. முடிவாக, மார்த்தாண்டவர்மா அவருடைய படைகளுக்கு செலுத்த முடியாத அளவிற்கு பணப் பற்றாக்குறையில் இருந்தார். மே மாதத்தில், காயங்குளத்தில் ஏற்பட்ட பேரழிவின்போது, திருவிதாங்கூரில் உள்ள அவருடையை அனைத்து செல்வங்களையும் எடுத்துச்சென்று கோவில்களுக்கு அர்பணித்தார். இந்தப் போரில், பெரிய அளவில் பணம் தேவைப்பட்டதால், கோவில்களுக்குள் வைத்த தங்கத்தினை எடுத்து, அவைகளை கலியான் பணமாக மாற்றினார்.[61] இருப்பினும், பணத் தட்டுப்பாடு அவருக்கு நீடித்தது.

நெடுமங்காடு கோட்டைகள் அனைத்தையும் டச்சு இழந்ததோடு வலுவூட்டும் வகையில் உதவிகள் எதனையும் டச்சு பெறவில்லை என்பதனை தேசிங்கநாடு கவனித்தது. போரைத் தொடர்ந்தால், அவர் முற்றிலுமாக தோற்கடிக்கப் படுவார் என்பதால் அவர் ஒரு முடிவுக்கு வந்தார். அதனால், மார்த்தாண்ட வர்மாவோடு பேச்சுவார்த்தையை துவங்கினார். 25 செப்டம்பர் 1742 அன்று மண்ணடியில் இரு தரப்பினரும் சமாதான பேச்சுவார்த்தையை துவங்கியபோது தொடக்கத்தில் திருவிதாங்கூர் போர் என்பது நெடுமங்காடுவில் உள்ள இளவரசியின் பிரதிநிதியின் இருப்பிடத்தைக் குறித்தே இருந்தது.[62] இந்த சமாதானம் இரு தரப்பினருக்கும் நன்மையாக இருந்தது. இது, அதிக போர் செலவுகளையும், விடுதலையையும், அவருக்கு எதிரான கூட்டணியில் இருந்த பிரச்சனையையும் இல்லாமல் ஆக்கியது. தேசிங்கநாடு, நாடு திரும்ப அனுமதிக்கப்பட்டார். காயங்குளத்தில் இருந்த அவருடைய பரம்பரை நிலங்கள் அவருக்கு வழங்கப்பட்டதற்கும் இணையாக எட்டு வருடங்களுக்கு 60,000 கொல்லம் பணம் (உத்தேசமாக ரூ.30,000) கப்பமாக கட்டவும் மற்றும் அபராதமாக ஒரு யானையும் வழங்க வேண்டும் என்கிற ஒரேயொரு உத்தரவுடன் அனுமதிக்கப்பட்டார். பீரங்கிகளையும், அவரால் கைப்பற்றப்பட்ட திருவிதாங்கூர்

நாயர் சொத்துக்களை மீட்டளிக்கவும் அவர் மேலும் வலியுறுத்தப்பட்டார். ரூ. 60,000 கொல்லம் பணத்திற்கு உத்திரவாதமாக அவருடைய மண்ணடி மற்றும் தொட்டிப்பேழா ஆகிய தோட்டங்களை வழங்கிட வேண்டும்.[63] அதனை வழங்குவதற்கு ஒப்புதல் அளித்ததன்மூலம் திருவிதாங்கூரின், அதாவது பழமைவாய்ந்த கிளையான வேணாட்டின் அரச குடும்ப மேலாதிக்க உரிமையை தேசிங்கநாடு அங்கீகரித்ததும் அல்லாமல் அவரது ஆட்சியின்கீழ் அடிபணிந்து போனது.

டச்சுவினர் குறைகாணா வகையில் தேசிங்கநாடு – திருவிதாங்கூர் அமைதியானது அவர்களுக்கு நன்மையாகவே அமைந்தது. இனிமேல் அவர்கள் தேசிங்கநாடுவிடம் ஆயுதங்கள், பணம் மற்றும் அரிசி ஆகியவைகளை கேட்கப் போவதில்லை. மிளகு வர்த்தகம் திரும்பவும் வளமாகப் போகிறது.[64] இராணுவ சூழ்நிலைகள் முற்றிலுமாக இப்பொழுது மாற்றம் கண்டுள்ளபோதும் அனுபவக் குறைவால் அவர்களுடைய விரைவு ஒப்பந்தம் மே மாதம் வரை நீடிக்க வாய்ப்பில்லை. 1691–இல் கோட்டயம் இளவரசரோடு ஏற்பட்ட முடிவினைக் குறித்து அவர்கள் மார்த்தாண்ட வர்மாவுக்கு நினைவுபடுத்தினர். அதற்கு மார்த்தாண்டவர்மா, இந்த இளவரசர் அபகரிப்பவராக இருப்பதால் அந்த ஒப்பந்தத்தில் எந்தவித மதிப்பும் இல்லை எனக்கூறி அதற்கு ஆட்சேபனை தெரிவித்தார்.[65]

1742 நவம்பர் தொடக்கத்தில், டச்சுவானது கொச்சி மற்றும் தெக்கும்கூர் ஆகியோரை திருவிதாங்கூருக்கும் தங்களுக்கும் இடையில் நடுவர்களாக இருந்து பணி செய்ய கேட்டுக் கொண்டது. விரைவிலே, அஞ்சுதெங்கு அருகிலுள்ள ஆற்றிங்கல் நதியில் கப்பலில் வைத்தே நேரடி பேச்சுவார்த்தை நடைபெற்றது. மார்த்தாண்டவர்மா, நேரடியாகவே பேச்சுவார்த்தையை நடத்தினார். மேலும், உயர்குடி மனிதரான சீரால்லியில் உள்ள கெய்மால்[66] மற்றும் நடுவர்களில் ஒருவரோடு உள்ள சந்திப்பில் கலந்துகொண்டபோது தெக்கும்கூர் மற்றும் கொச்சி இளவரசர்களை ஏளனம் செய்தார். மார்த்தாண்ட வர்மாவின் கருத்துப்படி, தெக்கும்கூர் மற்றும் கொச்சி ஆகியோர்தான் திருவிதாங்கூர் போரைத்

தூண்டியவர்கள். அவர்கள் தேசிங்கநாடோடு இணைந்து கொண்டு டச்சுவை போருக்கு உள்ளாக்கினர். அவர்களுடைய முக்கிய நோக்கமானது, அவர்களுடைய சுய இலாபத்திற்காக திருவிதாங்கூருக்கும் டச்சு கிழக்கிந்திய நிறுவனத்திற்கும் இடையில் விளையாடுவதுதான். விரைவிலே, திருவிதாங்கூர் வெற்றிபெறும் நிலையில் இருப்பதைக் கண்டறிந்த டச்சுவின் கூட்டாளிகள் கோழைத்தனமாக விலகிக் கொண்டனர். அவர் ஏளனமாய், மன்னர் என்கிற பட்டப் பெயருக்குக்கூட கொச்சி மன்னர் பெருத்தமானவர் அல்ல என்றார். சாப்பிடுவதும் குடிப்பதும் தவிர அவர் வேறெதுவும் செய்ததில்லை. அவருடைய காரியக்காரர் இந்த நாட்டை கொள்ளையிட்டது மட்டுமின்றி தன்னிச்சையாகவே ஆண்டார்.[67] இறுதியாக, மார்த்தாண்டவர்மா இரு இளவரசர்களின் தூதுவர்களிடம் ஒருநாள் விரைவாக வரும், அப்பொழுது அவர்களுடைய தலைவர்கள் அவர்களுடைய நயவஞ்சகச் செயலுக்காக தண்டிக்கப்படுவார்கள் என்றார்.[68]

1743 தொடக்கத்தில், தைன் வான் கொல்லெனேசே மலபார் கடற்கரையை விட்டுச் சென்றார். அவருக்குப் பதிலாக ரெனிகியூசு சியர்சுமா பொறுப்பு ஏற்றுக்கொண்டார்.[69] கொச்சி தளபதிகளின் மாற்றங்கள் டச்சுவுக்கும் திருவிதாங்கூருக்கும் இடையில் அமைதிக்கான புதிய தூண்டுதலை ஏற்படுத்தியது. சியர்சுமாவின் முதல் செயல்பாடு என்னவென்றால், திருவிதாங்கூருடன் சமாதானம் செய்வதற்கு எசக்கியல் ராபியும் அவருடன் துபாசி (இந்தோ ஐரோப்பியன்) வீரர்களின் தலைவரான சில்வெத்தர் மெண்டசு ஆகியோரை டச்சுவின் தூதுவராக கருநாகப்பள்ளியில் உள்ள மாவேலிக்கரைக்கு திருவிதாங்கூருடன் பேச்சுவார்த்தை செய்து முடிவுக்கு வர அனுப்பிவைத்தார். 22 மே 1743 மாவேலிக்கரையில் சமாதானப் பேச்சுவார்த்தை முடிவுக்கு வந்ததன் மூலம் மூன்று வருட காலப் போரும் முடிவுக்கு வந்தது. எல்லா கைதிகளையும் கொச்சிக்கு திருப்பி அனுப்ப திருவிதாங்கூர் மன்னர் சம்மதித்தார். அவரின் சேவையில் இன்றும் பணிசெய்து கொண்டிருக்கிற ஓடுகாலி ஐரோப்பியர்களை தண்டிக்கக் கூடாது என்றும், அவர்களை மீண்டும் கிழக்கிந்திய நிறுவனப் பணியில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்கிற ஒரே

நிபந்தனையை முன்வைத்தார். ஒரு கேண்டி என்பது 500 டச்சு பவுண்ட், அதாவது டச்சுவுக்கு 1,200 கேண்டி மிளகினை ஒரு கேண்டிக்கு ரூ 54க்கு வருடந்தோறும் வழங்குவற்கு திருவிதாங்கூர் மன்னர் உறுதி அளித்தார். ஏற்கனவே, டச்சுவுக்கு கிடங்குகள் இருக்கிற கருநாகப் பள்ளியிலுள்ள பண்டாரத் தோட்டத்தில் வைத்து மிளகுகள் விநியோகிக்கப் படும். திருவிதாங்கூருக்கு குண்டுகள், வெடி மருந்துகள், சக்கிமுக்கிக் கற்கள் ஆகியவைகளை அசல் விலையில் கொடுக்க டச்சு ஒப்புக் கொண்டதால் டச்சுவுக்கு குளச்சலில் தொழிற்சாலையை திரும்ப கட்டிக்கொடுத்து உதவிட மன்னர் முன்வந்தார். வர்த்தகப் பொருட்களை சுதந்திரமாக கையாளும் பொருட்டு துணி தொழிலுக்கு மையமாகத் திகழும் கோட்டாறு மற்றும் தேங்காப்பட்டணத்தில் டச்சுவுக்கு புதிய தொழிற்சாலைகள் கட்டிக்கொடுக்க மன்னர் முன்வந்தார். அத்துடன், டச்சு கிழக்கிந்திய நிறுவனத்தின் சொத்துக்கள் மற்றும் பணியாட்களை பாதுகாக்கவும், அவருடைய எல்கைக்குள் உரோமன் கத்தோலிக்க பாதிரியார்களுக்கு தடை விதிக்கவும் ஒப்புக் கொண்டார்.[70] வருடந்தோறும், மன்னர் அன்பளிப்புகளைப் பெறவும், 200 கேண்டி மிளகுகளை ஏற்றுமதி செய்யவும் அனுமதித்தார். பிரெஞ்சு மற்றும் ஆற்காடு நவாவுக்கு எதிராக மன்னருக்கு உதவி செய்யும் என டச்சு வாக்குறுதி அளித்தது. வரும் காலங்களில், திருவிதாங்கூர் மற்றும் தேசிங்கநாடு ஆகியவைகளுக்கு இடையில் பிரச்சனைகள் வரும்போது நடுநிலை வகுக்கவும் டச்சு ஒப்புக் கொண்டது.[71]

மூன்று நாட்களுக்குப் பின்பாக, 25 மே, சியர்சுமா மற்றும் மார்த்தாண்டவர்மா ஆகியோர் அம்பலபுழாவில் உள்ள புறக்காடு இளவரசரின் அரசவையில் இரண்டாவதாக கூடியபோது, அவர் திருவிதாங்கூரின் பக்கம் சாய்ந்துவிட்டார் என்பது தெளிவாகிறது. அங்கு, தேங்காப்பட்டணத்தில் உள்ள டச்சுத் தொழிற்சாலையை தனது செலவில் திரும்பவும் கட்டிக் கொடுப்பதாக மார்த்தாண்டவர்மா வாக்குறுதி அளித்த நிலையில், அதற்குப் பதிலாக போரினால் அழிந்த தேசிங்கநாடுவின் முன்னாள் குடியிருப்பான கொல்லம் அரண்மனையை திருப்பிக் கட்டி எழுப்புவதற்கு மரத்திலான

சதுர விட்டங்களை பெருவாரியாக டச்சுவினர் வழங்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார்.[72]

இந்த உடன்படிக்கை பயனுள்ள ஒத்துழைப்பிற்கான உறுதிமொழியாகத் தோன்றினாலும், படாவியாவின் உயர்மட்டக் குழுவானது இதில் கையெழுத்திட மறுத்துவிட்டது. திருவிதாங்கூருக்கும் தேசிங்கநாடுக்கும் இடையில் பிரச்சனைகள் வரும்போது நடுநிலை வகுக்க டச்சு மறுத்துவிட்டது மட்டுமின்றி, இந்த ஒப்பந்தம் துரிதமாக முடிவெடுக்கப்பட்டு உள்ளது என்பது படாவியாவின் கருத்தாகும். பிரெஞ்சு மற்றும் ஆற்காடு நவாப் ஆகியோரால் திருவிதாங்கூருக்கு அச்சுறுத்தல் ஏற்படும்போது டச்சு கிழக்கிந்திய நிறுவனமானது திருவிதாங்கூர் இராணுவத்திற்கு உதவி செய்திட வேண்டும் என்பதனை உயர்மட்டக் குழுவானது ஏற்க மறுத்துவிட்டது. இருப்பினும், மாவேலிக்கரை சமாதானத்தை ஒப்புக்கொள்ள சம்மதித்த நிலையில், அதிலுள்ள சிறிய அம்சங்களை மட்டுமே ஏற்பதாகக் கூறியது.[73] இன்னொருவகையில், திருவிதாங்கூரை கட்டுப்படுத்தும் வகையிலோ அல்லது தொடர் வெற்றிகளை பெறும் வகையிலோ டச்சுவுக்கு மனித வளம் பற்றாக்குறை உடையதாகவே இருந்தது.[74]

## Refrereces:


1. Cochin Council of Batavia, 26 October 1741; ARA, VOC 2525, fol. 28vo.-29ro.
2. The Presumpadappusswarupam Granthavari quoted in A.P. Ibrahim Kunju: “Travancore - Cochin Relations in the Eighteenth Century’ In: Journal of Kerala Studies (1973) 9.
3. Cochin Council of Batavia, 26 October 1741; ARA, VOC 2525, fol. 27vo.
4. Ibidem. fol. 27vo-29ro.
5. Cochin Council of Batavia, 29 June 1743; ARA, VOC 2601, fol. 82vo.
6. Diary of the expendition against Travancore, 21 December 1741 until 3 April 1742, entry of 27 October 1741; ARA, VOC 2564. fol. 2510ro-vo. (henceforward: Diary expedition Travancore).
7. Cochin Council of Batavia, 6 November 1741; ARA, VOC 2561, fol. 54vo.
8. Cochin Council of Batavia, 16 July 1742; ARA, VOC 2561, fol. 244ro.

9. Bruininck (Colombo) to Tuticorin, 13 October 1741; ARA, VOC 2523, fol. 1391ro-vo.
10. Relaas Hartman, 16 December 1741; ARA, VOC 2523, fol. 1439ro.
11. Resolution Cochin Council, 20 December 1741; ARA, VOC 2577, fol. 927.
12. Alfred, artomeai: Les origins de Mahe de Malabar (Paris, 1917) ix.
13. Bertand -Francois Mahe cointe de la Bourdonnais (1699-1733); Frech dmiral, since 1734 Governor - General of Mauritius and Reunion. He established the French factory at Mahe whcich was named after him. See: Dictionnaire de biographie francaise (Paris 1944) fascicule CVIII, 1396-1397,
14. De la Bourdonnais (Anjengo) to Duplex (Pondichery), 30 January 1742, ANF, Colonies, C/278, fol. 297vo-298ro.
15. Fortress Seeburg (Paravur) to Quilon, 16 January 1742; ARA, VOC 2581, fol. 6708-6481.
16. Resoloution Quilon Council of War, 15 January 1742; ARA, VOC 2581, fol. 6108-6109.
17. Stein van Gollenesse to Martanda Varma, 16 January 1742; ARA, VOC 2581, fol. 6110-6111.
18. Martanda Varma to Stein van Gollenesse 15 January 1742; ARA, VOC 2581, fol. 6108-6109
19. Resolution to Quilon Council of War, 23 January; ARA, VOC 2581, FOL. 6171-6174.
20. Vanji Mutton Pillai to Captain Berger, 29 December 1741; ARA, VOC 2564, fol. 2518ro-2519ro.
21. Cochin Council of Batavia, 14 May 1742; ARA, VOC 2577, fol. 278-279.
22. Resolution to the kilimanur Council of War, 17 February 1742; ARA, VOC 2581, fol. 6171-6174.
23. Cochin Council of Batavia, 20 Feburary 1742; ARA, VOC 2577, fol. 100-101.
24. Resolution to the kilimanur Council of War, 17 February 1742; ARA, VOC 2581, fol. 6175-6177.
25. Ibidem, fol. 6178-6181.
26. Cochin Council of Batavia, 20 Feburary 1742; ARA, VOC 2577, fol. 128-133.
27. Ibidem, fol. 105.
28. Resolution Ayrur Council of War (fortress Hollandia), 21 February 1742; ARA, VOC 2581, fol. 6186-6188.
29. Ibidem, fol. 6196.
30. Cochin Council of Batavia, 14 March 1742; ARA, VOC 2561, fol. 140vo.
31. Diary expendition Travancore, entry of 22 March 1742; ARA, VOC 2564, fol. 2680vo.

32. Ibidem, fol. 2680-2681ro.
33. Cochin Council of Batavia, 21 March 1742; ARA, VOC 2561, fol. 158vo.
34. Cochin Council of Batavia, 20 March 1742; ARA, VOC 2577, fol. 26. See about the Chinese rebellion on Java the study of W. Remmlink: The Chinese waar and the collapse of the Java state. 1725-1743 (Verhandelingen van het Koninklijk Instituut voor Tall-, Land-, en Volkenkunde, vol. 162) (Leiden, 1994).
35. Cochin Council of Batavia, 21 March 1741; ARA, VOC 2561, fol. 158vo.
36. Cochin Council of Batavia, 14 May 1742; ARA, VOC 2577, fol. 294-296.
37. Ibedem, fol. 289-290.
38. Cochin Council of Batavia, 21 March 1742; ARA, VOC 2561, fol. 218vo.
39. Anjengo to Tellicheri, 28 March 1742; ARA, VOC 2561, fol. 218vo.
40. Fortress Seeburg (Paravur to Captain Berger (fortress Haolandia, Ayrur), 4 April 1742; ARA, VOC 2581, fol. 6696-6697.
41. Cochin Council of Batavia, 19 May 1742; ARA, VOC 2581, fol. 211ro.
42. Cochin Council of Batavia, 17 April 1742; ARA, VOC 2581, fol. 7747-7749.
43. Cochin Council of Batavia, 5 November 1742; ARA, VOC 2609, fol. 30-31
44. Captain Berger (Fortress Hollandia, Ayrur) to Stein van Gollenesse (Cochin), 13 April 1762; ARA, VOC 2581, fol. 6721-6725.
45. Ibedem, fol. 6726-6727.
46. Cochin Council of Batavia, 19 May 1742; ARA, VOC 2581, fol. 7765-7766.
47. Ibedem, fol. 7762-7763.
48. Ibedem, fol. 7757-7759.
49. Cochin Council of Batavia, 14 May 1742; ARA, VOC 2577, fol. 298-300.
50. Van Ronkel, “Europeesche Tamilspraakkunst”, 593.
51. Cochin Council of Batavia, 14 May 1742; ARA, VOC 2577, fol. 285-287.
52. Cochin Council of Batavia, 16 July 1742; ARA, VOC 2561, fol. 242vo.
53. Secret letter Cochin Council to Batavia, 3 August 1742; ARA, VOC 2581, fol. 7823 and idem, 6 November 1742; ARA, VOC 2561, fol. 58vo.
54. Cochin Council of Batavia, 16 July 1742; ARA, VOC 2581, fol. 7823.
55. Cochin Council of Batavia, 14 May 1742; ARA, VOC 2577, fol. 310.
56. Cochin Council of Batavia, 19 May 1742; ARA, VOC 2581, fol. 7761.
57. Cochin Council of Batavia, 16 July 1742; ARA, VOC 2581, fol. 7826.
58. Cochin Council of Batavia, 3 August 1742; ARA, VOC 2581, fol. 7845.
59. Ibedem, fol. 7846-7847.
60. Translated ola of De la Bourdonnais to Martanda Varma, 6 July 1742 (intercepted by the Dutch); ARA, VOC 2564, fol. 2815vo.
61. Secret letter Cochin Council of Batavia, 3 July 1742; ARA, VOC 2581, fol. 7845-7846.

62. Van Ronkel, "Europeesche Tamilspraakkunst", 38. In recent literature this treaty is mistakenly called the treaty of Mannar. See for example: A.P. Ibrahim Kunju: "Expansion of Travancore in the 18th Century". In: Journal of Indian History, 1975, p. 451 and Koshy. Dutch power 79 and A. Shreedhara Menon: Kerala history and its makers (Trivandrum, 1987) 148.
63. Cochin Council of Batavia, 6 November 1742; ARA, VOC 2561, fol. 50ro and idem, 29 June 1743; ARA, VOC 2601, fol. 82vo.
64. Cochin Council of Batavia, 6 November 1742; ARA, VOC 2561, fol. 51vo.
65. Stein van Gollenesse to Paliyath Achan, 25 March 1742; ARA, VOC 2564, fol. 2695ro-2696vo and Secret letter Cochin Council to Batavia, 3 August 1742; ARA, VOC 2581, fol. 7848-7852.
66. Van Ronkel, "Europeesche Tamilspraakkunst", 568-569 says about him: the most distinquished of the Anchi Kaimal (five noble lords) of Cochin.
67. Cochin Council of Batavia, 6 November 1742; ARA, VOC 2561, fol. 53vo.
68. Ibedem, fol. 52ro-53vo.
69. Reinicus Siersma (died 1757) served from 12 September 1732 as captain lieutenant on the Malabar coast, became on 14 August 1733 captain and on 1 March 1740 captain of Porto Novo; 28 December 1741) sergeant-major of the Batavis castle and on 27 August 1742 appointed in Batavia to be commander of Malabar unitl 1748. In 1752 he became governor and director of Banda. See: Wijnaendts van Resandi, Gezaghebbers, 190-191.
70. Corpus Dplomaticum Neerlando-Indicum, vol. V. 348-349.
71. Ibedem, fol. 350-351.
72. Cochin Council of Batavia, 1 June 1743; ARA, VOC 2609, fol. 1330.
73. Corpus Dplomaticum Neerlando-Indicum, vol. V. 352-353.
74. Secret letter Cochin Council of Batavia, 29 June 1743; ARA, VOC 2599, fol. 2344ro-vo.

## அத்தியாயம் - 5

# திருவிதாங்கூர் சேவையில் ஐரோப்பியர்கள்

குளச்சலை முற்றுகையிட்ட டியூவான்சாட்டின் சேவை அங்கீகரிக்கப்பட்டது மட்டுமின்றி, திருவிதாங்கூர் இராணுவத்தில் ஐரோப்பிய படை வீரர்கள் பலரை அவர் சேர்த்ததன் பலனாக அக்டோபர் 1741 அன்று திருவிதாங்கூர் படைத் தளபதியாக அவரை மார்த்தாண்ட வர்மா நியமனம் செய்தார். அதனால், அவர் 30,000 வீரர்கள், 4,000 முதல் 5,000 ஐரோப்பிய துப்பாக்கிகளை தரித்திருந்த படை வீரர்கள் ஆகியோருக்கு கட்டளையிடும் அதிகாரத்தைப் பெற்றார். படை வீரர்கள் அனைவரும் நாடு முழுவதும் வியாபித்திருந்த நிலையில், அவர்கள் அனைவரையும் இரண்டு நாட்களுக்குள் ஆற்றிங்கலில் ஒன்றுசேர உத்தரவு பிறப்பித்தார்.[1] திருவிதாங்கூர் இராணுவ வீரர்கள் ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு நகர வேண்டிய உத்தரவுகள் மிக இரகசியமாக கடைபிடிக்கப்பட்டு வந்தது. இத்தகைய துல்லியமான உத்தரவுகளை மன்னரின் காரியக்காரர் மட்டுமே அறிந்திருக்கும் நிலையில், யுத்த தந்திரத்தை மன்னர் மற்றும் அவரின் முதன்மை ஆலோசகர் தளவாய் ஆகியோரும் அறிந்திருப்பர்.

இப்பொழுது, டியூவான்சாட்டுவை மார்த்தாண்டவர்மா குறைந்த அளவிலேயே பயன்படுத்தி வந்தார். அவர், வெப்பநோயால் பாதிக்கப்பட்டு மனரீதியாக பலகீனமடைந்த நிலையில் இருந்தார். நவம்பர் 1741 அன்று, அவர் அஞ்சுதெங்கு சென்ற நிலையில், அவரை அங்கிருந்த ஆங்கில முதன்மை அதிகாரி சார்லசு ஒயிட்கில், ‘அனைத்துவகை கௌரவம் மற்றும் மரியாதை’யுடன் வரவேற்றார்.[2] அவருக்கு அஞ்சுதெங்குவில் மருத்துவம் செய்ய, திருவிதாங்கூரால் கைது செய்யப்பட்ட டச்சு மருத்துவர் ரோசன்வெல்ட் பணிக்கப்பட்டிருந்தார். டியூவன்சாட்வுக்கு மருத்துவம் செய்ய மறுத்தால், மரணத் தண்டனைக்கு உட்படுத்த நேரிடும் என

*ரோசன்வெல்ட் மிரட்டப்பட்டு இருந்தார். இது நிருபிப்பது என்னவென்றால், டியூவன்சாட்வின் சுகவீனம் அவருடைய இராணுவத்திற்கு மிகப்பெரிய அபாயத்தை ஏற்படுத்தும் என மார்த்தாண்டவர்மா கருதினார். திருவிதாங்கூர் மன்னர் பயந்தது யாதெனில், டியூவன்சாட் மரணமடைந்தால் அவருடைய இராணுவத்தில் இருக்கிற எல்லா ஐரோப்பியர்களும் தப்பியோடி விடும் நிலையில் டச்சுவுக்கு எதிரான போரில் தோல்வி அடைந்துவிடுவோம் என்பதாகும். ஒரு நபரின் உடல் நலமின்மை அவருடைய நாட்டைப் பாதிக்கிறது என்பதனையும், அது போதுமானளவு பலகீனத்தை உருவாக்கும் என்பதனையும் டச்சுவினர் நன்கு அறிந்திருந்தனர்.*

*டச்சுவினர் தப்பிவிடாமல் இருப்பதற்கு மார்த்தாண்ட வர்மா பல முயற்சிகளைச் கையாண்டார். அவர்கள், அதிக சம்பளத்தைப் பெற்றதுடன் நாடு முழுவதும் பரவியிருந்தனர். அவர்கள் தப்பியோடிய நிலையில் பிடிபட்டால் மரணத் தண்டனைக்கும் ஆளாக்கப்பட்டனர். சான் கிறித்தோபால் கார்ட்மேன் என்பவர் திருவிதாங்கூர் இராணுவத்தில் பணி புரிந்தபோது ஆரம்பத்தில் 10 ரிச் டாலர்கள் (உத்தேசமாக 17.8 ரூபாய்) பெற்ற நிலையில், பின்னர் 15 ரிச் டாலர்கள் (உத்தேசமாக 26.7 ரூபாய்) பெற்றார். அவருடைய அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது யாதெனில், நாடு முழுவதும் டச்சுக்காரர்கள் இருப்பதால், ஒரு மனிதர் பல மனிதர்களால் வெகு எளிதில் கண்காணிக்கக்கூடும் என்பதால் அங்கிருந்து தப்புவது மிகக் கடினம் என்கிறார்.[3]*

*டியூவன்சாட்வின் முன்னெச்சரிக்கை இருந்தபோதும், தப்பியோட முயற்சி செய்தவர்கள் கடுமையான முறையில் தண்டிக்கப்பட்டார்கள். இந்நிலை இரண்டு டச்சுக் காரர்களுக்கும் ஏற்பட்டதை உதாரணமாகக் கூறலாம். அவர்களுடைய தோழர்களுக்குப் பாடமாக இருக்கும் வகையில் இருவரிடமும் இதனை செயல்படுத்த டியூவன்சாட் விரும்பினார். தொடக்கத்தில், இந்த தண்டனைக்கு மார்த்தாண்டவர்மா ஆட்சேபனை தெரிவித்தபோதும், வருங்காலத்தில் இப்படிப்பட்ட தப்பி ஓடுதல்கள் நடைபெறாமல் தவிர்ப்பதற்கு இது ஒன்றே வழியென அவரை டியூவன்சாட் இணங்கச் செய்தார். டச்சு ஆவணங்களை*

வாசிப்பதால் ஏற்படுகிற ஆர்வம் என்னவென்றால், மன்னரை டியூவன்சாட் இணங்கச் செய்ததன்மூலம், அவர் பரலோக இராச்சியத்தில் இருந்து டச்சுவுக்கு எதிராக திருவிதாங்கூர் இராச்சியத்தைக் காப்பாற்ற வந்திருக்கிறார் என்பதே.[4] அதன்விளைவாக, மரணத் தண்டனைகள் கடலோரப் பகுதியில் வைத்து மிகக் கொடுமையான முறையில் நிறைவேற்றப்பட்டன. பரிதாபமாக, அந்த இரு மனிதர்களையும் கம்புகளில் கட்டிவைத்து சுட்டுக் கொன்றனர்.

அந்த பயம், அவர்கள் தப்பிச் செல்வதனை தடுத்து நிறுத்திவிடவில்லை. 27 நவம்பர் 1741 அன்று, டியூவன்சாட்டை குணப்படுத்துவதற்கு அறிவுறுத்தப்பட்டிருந்த மருத்துவர் ரோசன்வெல்ட் என்பவர் அஞ்சுதெங்குவில் இருந்து பரவூரில் இருக்கிற டச்சுவின் கோட்டையான சீபெர்க்வுக்கு தப்பிச் செல்ல முடிந்தது. உடனடியாக, அஞ்சுதெங்குவில் இருந்த டியூவன்சாட்டை கைதுசெய்ய ஓர் படையை டச்சு அனுப்பியது.[5] ஆனால், அவர் அங்கிருந்து தப்பிவிட்டார். அதன்பின்பாக பல டச்சுவினர் தப்பிச் சென்றனர். கொச்சியில் டச்சுவினருக்கு கிடைத்த ஓர் தகவலில், ஓடுகாலிகளாய் திருவிதாங்கூர் சென்றதற்கு நடவடிக்கை எடுக்கக்கூடாது என்கிற ஒரேயொரு நிபந்தனையுடன் சான் டேனியல் எமரிக் என்பவர் அவருடைய குழுவிலுள்ள 50 ஐரோப்பியர்களுடன் திரும்பி வர விரும்புவதாக கூறியிருந்தார்.[6] டச்சுவினர் மகிழ்ச்சியாகவே இந்த இசைவை ஏற்றுக்கொண்டதன் காரணமாக இத்திட்டம் செயல்படுத்தப்பட இருந்த தருணத்தில், டேனியல் எமரிக் காயங்குளத்திற்கு அனுப்பப்பட்டதால் அவருடைய தப்பித்தல் தடுக்கப்பட்டது.

மாவேலிக்கரை சமாதான உடன்படிக்கையைத் தொடர்ந்து (மே 1743), தன்னுடைய படையில் இருக்க விரும்பாத டச்சுவினரையும், இராணுவத்தில் பணி செய்ய தகுதி இல்லாதவர்களையும் மார்த்தாண்டவர்மா திருப்பி அனுப்பத் துவங்கினார்.[7] டச்சு கிழக்கிந்திய நிறுவனமானது அவர்களுக்கு பொது மன்னிப்பு வழங்கியிருந்தும், அவர்களின் சொந்த விருப்பத்தின்பேரில் அவரிடமே பணிசெய்ய விரும்பியவர்களை திருப்பி அனுப்ப மறுத்தது மட்டுமின்றி, அவர்களுக்கு மரண தண்டனை வழங்கிவிடும் எனக் காரணம்

கூறினார். அவர், டச்சுத் தளபதி சில்வெத்தர் மென்டசுவை அழைத்து, தனது நாட்டில் அவர்களின் விருப்பத்திற்கு விரோதமாக ஐரோப்பியர்களை கைது செய்து வைத்திருந்தால், அவர்களைத் தேடிப் பாருங்கள் என்றார். அதற்குப் புதிய தளபதி சிர்சுமா ஏளனமாக, மன்னர் அவர்களை மிகவும் பாதுகாப்பாக வைத்திருப்பதால் தன்னைப் போன்று நூறு தளபதிகள் வந்தாலும் ஐரோப்பிய ஓடுகாலிகளை தங்களால் கண்டுபிடிக்க முடியாது என்றார்.[8]

பெரும்பான்மையான ஓடுகாலிகள், கல்குளம் பகுதியில் தங்கியிருக்கிறார்கள் என்பது சிர்சுமாவுக்குத் தெரியும். விரைவாகவோ அல்லது தாமதமாகவோ இந்த டச்சுக்காரர்கள் மன்னரை ஏமாற்றிவிடுவார்கள் என்றும், குறிப்பாக டியூவன்சாட் படுக்கையில் இருப்பதால் விரைவிலே மரித்துவிடுவார் என்றும் எதிர்பார்த்தார். அவருக்கு பின்வருவரான, 'லெ நூய்' (எ) எசுதாக்கி டி லெனாய் என்பவர் அந்த துரோகியைவிட மிகச் சிறந்தவர் அல்ல என சிர்சுமா கருதினார். சிர்சுமா பார்வையில், டி லெனாய் மன்னரின் விருப்பத்திற்கு ஏற்றவராயினும், அவருடைய கொச்சி நண்பர்களுக்கு எழுதிய கடிதத்தில், கன்னியாகுமரி அருகில் திருவிதாங்கூர் மன்னருக்கு டி லெனாய் ஓர் கோட்டை கட்டியிருந்ததையும் வெளிப்படுத்தியிருந்தார்.

டச்சு ஓடுகாலிகளை திருப்பி அனுப்புவதற்குப் பதிலாக திருவிதாங்கூர் மன்னர் சிர்சுமாவுக்கு சிறப்பு அன்பளிப்பாக பெரிய பழுப்பு நிறத்தாலான கரடி ஒன்றினை அனுப்பி வைத்தார். ஓர் குழந்தை கிடைப்பது போன்று அந்த கரடி மன்னருக்குக் கிடைத்ததுமின்றி, அதற்கு பல வித்தைகளும் பயிற்றுவிக்கப்பட்டு இருந்தது. மன்னர் வெளிப்படையாக நினைத்தது யாதெனில், கரடியின் வித்தைகளால் புதியத் தளபதி சிர்சுமா மகிழ்ச்சி அடைவார் என்பதாகும். இந்த தேவையற்ற அன்பளிப்பிற்கு பாசாங்குபோல் தளபதி மகிழ்ந்துவிட்டு, மன்னரின் தூதுவர்களுக்கு விரிவாகவே நன்றி தெரிவித்தவிட்டு, மன்னரின் நேர்மையை சந்தேகப்படவில்லை என்றும், இன்னும் திருவிதாங்கூரில் சேவை செய்யும் டச்சுக்காரர்களை திருப்பி அனுப்புவதற்கு மன்னர் முன்வர வேண்டும் என்று அவர்களிடம் கூறினார்.[9]

*1743 இறுதியில், கிட்டத்தட்ட 40 ஐரோப்பியர்கள் பணியில் இருந்தார்கள். டச்சு வீரர்களை பணியில் அமர்த்த காரணமாக இருந்த டியூவன்சாட், திருவிதாங்கூர் படைக்கு கட்டளையிட முடியாத நிலையில் மிகவும் நோய்வாய்ப்பட்டு 1744 மே மாதம் இறந்துபோனார். டியூவன்சாட் மரணம் குறித்து தளபதி சிர்சுமா கூறிய கருத்தாவது:*

> *"இந்த மனிதர்கள் எல்லோரும் அவர்களுடைய போக்கிரித்தனமான தலைவர் டியூவன்சாட் மரித்தவுடனே மறைந்து விடுவார்கள் என்று நான் நினைக்கிறேன். நீண்ட நோயில், மிகக் கொடுமையான வலியில், சர்வ வல்லமையுடைய கடவுளிடமிருந்து தண்டனை கிடைத்த பின்பாக அவர் மரித்துப் போனார். இப்பொழுது டியூவன்சாட்டை தொடர்ந்து திருவிதாங்கூரில் தளபதியாக பொறுப்பேற்றவர் யாரெனில் கன்னியாகுமரியில் இருந்து ஓடுகாலியாய் வந்த எசுதாக்கி டி லெனாய்".[10]*

*ஆனால், சியர்சுமா நினைத்தது தவறு. வீழ்ச்சிக்குப் பதிலாக எசுதாக்கி பெனடிக்ட் டி லெனாயின் உதவியின் மூலம் திருவிதாங்கூர் தங்களது இராணுவ பலத்தை வலுப்படுத்திக் கொண்டது. டச்சுக்காரர் அல்லது அதற்கு மேலும் பெல்சியன் என்றும் அழைக்கப்பட்ட அவர், பிரெஞ்சு நகரத்திலுள்ள ஆரசில் 29 திசம்பர் 1715–இல் பிறந்தவர்.[11] அவருடைய இளைமைக்காலம் குறித்தத் தரவு மிகக் குறைவாகவே கிடைக்கிறது. ஆனால் நிச்சயமாக, டி லெனாய் குடும்பம் பதினேழாவது மற்றும் பதினெட்டாவது நூற்றாண்டில் ஆரசு நகரத்தில் மிகவும் புகழ்பெற்றதாய் இருந்தது.[12] மொயென்சின் கருத்துப்படி, இளமையான மனிதராக டி லெனாய் இருந்தும், போர் குறித்தும், கோட்டைகள் கட்டுவதான நுணுக்கங்கள் குறித்தும் தெரிந்து வைத்திருந்தார். அனால், எப்படி, எப்பொழுது அந்த நுணுக்கங்களை அவர் கற்றுக்கொண்டார் என்பது தெரியவில்லை.[13]*

*2 ஆகத்து 1741 அன்று, குளச்சலை விடுவிக்கும் முயற்சி ஒன்றில் டச்சு இராணுவம் ஈடுபட்டுக் கொண்டிருந்தபோது*

எசுதாக்கி டி லெனாய் ஓடுகாலியாய் வெளியேறினார்.[14] திருவிதாங்கூர் மன்னரிடம் டி லெனாய் சரணடைந்தது குறித்து பலவிதமான பதிவுகள் அங்கே இருக்கின்றன. இந்நிகழ்வானது, எழுத்தாளர்களையும், பத்தொன்பதாம் நூற்றாண்டு ஓவியர்களையும் மட்டுமின்றி, வானொலி நாடகமாகக்கூட எழுதப்பட்டிருக்கிறது.[15] 1878–இல் பிரபலமான வரலாற்றாளர் சங்குண்ணி மேனன் எழுதுகையில், மார்த்தாண்டவர்மா அவருடைய சேவையில் டி லெனாயை இணைத்துக் கொண்டதற்கு காரணம் என்னவென்றால், டி லெனாயின் முகத்தைப் பார்த்தவுடனே அவரிடம் பெரிய திறமைகள் இருப்பதை முகத்தில் கண்டுகொண்டார் என்பதாகும்.[16] இந்த கதை எந்தவகையிலும் வரலாற்று ஆவணங்களால் நிருபிக்கப்படவில்லை.

நிச்சயமாக நமக்குத் தெரிவது என்னவென்றால், எசுதாக்கி டி லெனாய் ஓடுகாலியாய் வந்த 11 நாட்களுக்குப் பிறகு, 13 ஆகத்து 1741 அன்று பேச்சுவார்த்தை மூலம் குளச்சலை முற்றுகையிட்டிருந்த டச்சுப்படையை வெற்றிகரமாக சரணடையச் செய்தார் என்பதாகும். அதன்பிறகு அவர் திருவிதாங்கூர் சார்பில் டியூவன்சாட்டின்கீழ் டச்சுவுக்கு எதிராகப் போரிட்டார். அவர் தீப்பொறி துப்பாக்கி பயிற்றுவிப்பாளராகவும் இருந்தார்.[17] 1742 இறுதியில், மன்னரின் அரண்மனை காவலை மறுசீரமைக்க மூன்று மாதத்தில் வீரர்களுக்கு டி லெனாய் பயிற்சி கொடுத்தார். திருவிதாங்கூர் வீரர்கள் ஏற்கனவே நல்ல பயிற்சி பெற்றதால் மதுரை வீரர்களை மார்த்தாண்டவர்மா திருப்பி அனுப்பியதால் மாதந்தோறும் 60,000/– பணம் மிச்சமானது.[18] அரண்மனை காவலர்கள் ஐரோப்பியர்களைப் போன்று ஆயுதங்கள் மற்றும் ஆடைகள் அணிந்து கொண்டனர். புதிய காவலர்களை பார்த்த மார்த்தாண்டவர்மா மிகவும் திருப்தியடைந்த நிலையில், டி லெனாயை டியூவன்சாட்டிற்கு அடுத்தபடியாக வேணாட்டின் தளபதியாக வேணாட்டு கப்பித்தானாக நியமித்தார்.

டி லெனாய், தளபதியான பின்பாக சிரியன் கிறித்தவத்தைச் சார்ந்த மார்க்ரெட் என்ற பெண்மணியை திருமணம் செய்து கொண்டார். அவளுடைய தகப்பனார்

திருவிதாங்கூர் மன்னருக்கும், அஞ்சுதெங்குவில் உள்ள ஆங்கிலேயர்களுக்கும் மொழிபெயர்ப்பாளராக இருந்தார். அவளுடைய தகப்பனார் முதலில் டி லெனாய்க்கு பெண் கொடுக்க மறுத்துவிட்டார். அதற்குக் காரணம் என்னவென்றால் டி லெனாய் ஓர் ஓடுகாலி மட்டுமின்றி புறசமயத்தைச் சார்ந்த மன்னரின் அரை நிர்வாண குடிமக்களுக்கு பயிற்சி கொடுத்தவரும் ஆவார்.

இதனை மார்த்தாண்ட வர்மாவிடம் டி லெனாய் கூறியபோது, மன்னர் கோபம் அடைந்து, மார்க்ரெட்வின் தகப்பனாரை மிரட்டியதன் காரணமாக 1744–இல் திருமணம் நடைபெற்றது.[19] திருமணத்திற்குப் பின்பாக இருவரும் உதயகிரி கோட்டையில் தங்கினர். உதயகிரிக்கு வெளியே, டி லெனாய்க்கு அதிகளவில் சொத்துக்களும், மன்னரிடமிருந்து பெற்றுக் கொண்ட அன்பளிப்புகளும் தாராளமாகவே இருந்தது.[20] 1748 மற்றும் சூன் 1749–இல் டி லெனாய் 2,900 கலியான் பணத்தை (உத்தேசமாக 20,300 ரூபாய்) அவருடைய சிறப்பு பணிக்கான வெகுமதியாக திருவிதாங்கூரில் இருந்து பெற்றுக் கொண்டார்.[21] அவருக்கு, 5 ஆகத்து 1745–இல் யோன்னா எசுதாக்கி பெனடிக்ட் டி லெனாய் என்கிற ஆண் குழந்தை உதயகிரி கோட்டையில் வைத்துப் பிறந்தது.

1758–இல் மார்த்தாண்டவர்மா மரணத்தைத் தழுவினார். டி லெனாயின் மகன் யோன்னா எசுதாக்கி பெனடிக்ட் டி லெனாய் 20 வயதில், அதாவது 14 செப்டம்பர் 1765–இல் களக்காடு போரில் கொல்லப்பட்டார். இவரை மக்கள், 'சிறிய கப்பித்தான்' என்று அழைத்து வந்தனர். இவருடைய தகப்பனார் வலிய கப்பித்தான் என்று அழைக்கப்பட்டார்.[22] அப்போதைய மன்னர் இராம வர்மாவின் அனுமதிபெற்று, அவருடைய மகனின் நினைவாக உதயகிரி கோட்டைக்குள்ளே கத்தோலிக்கத் தொழுகைக்கூடம் ஒன்றினை அவருடைய செலவில் டி லெனாய் கட்டினார்.[23] இன்றைக்கும் அக்கோட்டையும், தொழுகைக்கூடமும் அவ்விடத்தில் இருக்கிறது. 36 வருடங்கள் நம்பிக்கைக்கு உரியவராக திருவிதாங்கூர் மன்னர்களிடம் பணி செய்த டி லெனாய் 1 சூன் 1777–இல் மரணம் அடைந்தார். இராணுவ மரியாதையுடன் அவரது உடலானது அவரது மகனை

அடக்கம் செய்த அதே கத்தோலிக்க தொழுகைக் கூடாரத்தில் அடக்கம் செய்யப்பட்டது.

மார்க்ரெட் அவளுடைய கணவரின் மரணத்திற்கு பின்பாக அதே உதயகிரி கோட்டையில் அவளுடையை மகளுடன் தங்கி இருந்தார். அவளுடைய மகள் முன்திருமணத்தின் மூலம் பிறந்தவள். அதாவது, டி லெனாயை மார்க்ரெட் திருமணம் செய்வதற்கு முன்பாக அவளுடைய முதல் கணவர் மூலம் பிறந்தவள். அவளை, கோழிக்கோடு பகுதியைச் சார்ந்த மத்தாய் என்பவருக்கு திருமணம் செய்து வைத்தார்.[24] 1778–இல் மன்னர் இராமவர்மா, வலிய கப்பித்தானின் சம்பளத்தை அவரின் மரணத்திற்கு பிறகும் அவருடைய விதவை மனைவிக்கு அனுப்பிவைத்து உதவினார்.[25] மார்க்ரெட் டி லெனாய், திருவிதாங்கூர் ஏழை மக்கள் மத்தியில் தொண்டு செய்து வந்தார்.[26] 11 செப்டம்பர் 1782இல் மார்க்ரெட் மரணம் அடைந்தார். அதே உதயகிரி தொழுகைக் கூடாரத்தில், அவளுடைய கணவர் அருகில் அவரும் அடக்கம் செய்யப்பாட்டார்.

## References:


1. Relaas Hartman; ARA, VOC 2523, fol. 1438ro.
2. Stein van Gollenesse (Cochin) to Charles Whitehill (Anjengo), 9 December 1741; ARA, VOC 2564, fol. 2764ro.
3. Relaas Hartman; ARA, VOC 2523, fol. 1437ro.
4. Secret letter Cochin Council to Batavia, 26 October 1741; ARA, VOC 2525, fol. 41ro.
5. Resolution Cochin Council, 30 November 1742; ARA, VOC 2561, fol. 45ro-vo.
6. Coachin Council to Batavia, 6 Novemer 1742; ARA, VOC 2577, fol. 877.
7. Groot, Gedenkschrift Moens, 125-126.
8. Cochin Diary from 1 October 1743 until 31 March 1744; ARA, VOC 2624, fol. 519vo.
9. Ibidem.
10. Coachin Council to Batavia, 2 May 1744; ARA, VOC 2624, fol. 74ro.
11. Bibliotheque Municipale d’Arras, register des baptemes (1714-1720) de la paroisse Saint Nicolas en I’ Attre GG 128. A copy of this certificate can be found in the De Lannoy Family Archives inv. No. 60, fol. 276ro.

12. Artois and its capital Arras was ceded to France in 1659, The Counts De Lannoy Beaurepaire possessed a “hotel” in Arras until the French Revolution when members of this family were executed in this city under the guillotine, See: L.J. Bord: “La famille de Lannoy Beaurepaire ou les agreements de la recherché genealogique” In: Revue francaise de geneologie (1981) nr. 11: 17-19.
13. Groot, Gedenkschrift Moens, 150.
14. List of persons deserted from the Malabar Coast, dated 14 May 1742; ARA, VOC 2580, fol. 5688.
15. In the former summer residence of the kings of Travancore at Padmanabhapuram a painting can still be seen depicting the surrender of the Dutch captain De Lannoy to the Travancore king. The radio play is partly incorporated in K.L. Bernard: Flashes of Kerala History (Cochin 1980) a book without historical value.
16. P. Shagoony Menon: History of Travancore from the Earliest times (Trivandrum, 1878) 136 and P.N. Surnanad Kunjan Pillai: Tiruvitankurile mahanmar (Trivandrum, 1946) (Malayalam ed.) 79-83.
17. Coachin Council to Batavia, 14 May 1742; ARA, VOC 2581, fol. 7756-7757.
18. Coachin Council to Batavia, 6 November 1742; ARA, VOC 2561, fol. 244ro.
19. Anquetil du Perron, Zend-Avesta, tome premier, premiere partie, 150.
20. Until the end of the nineteenth century, Eustache de Lannoy was known by the old ingabitants of the villages near Udayagiri as “Istach” a corruption of ‘Eustache”, See: Julian James Cotton: List of inscriptions on tombs or monuments in Madras; possessing historical or archaeological interest (Madras, 1905) 377.
21. Kerala State Archives, Matalikam records Churuna 2630, ola 218-221.
22. Joannes Eustachius Benedictus de Lannoy seems not to be the only child of Eustache. Before 1940 there lived a family De Lannoy de Carvalho in Trivandrum which was probably illegitimate offspring of Eustache de Lannoy.
23. Da San Bartolomeo, Voyage, 114.
24. Cathanar Thomman Paremmakkal; the Varthaamanapusthokam. An account of the history of the Malabar Church between the years 1773 and 1786 with special smphasis on the events connected with the journey from Malabar to Rome via Lisbon and back undertaken by Malpan Mar Joseph Cariattil and Cathanar Thomman Paremmakkal (Orientalia Christiana Analectica 190) (Roma, 1971) 68.
25. Parammakkal. Varthamanappusthakam, 68.
26. Travancore Archaelological Series, 55.

## சுருக்கக் குறியீடுகள்:

1. VOC: Verenigde Oostindische Compagnie (Dutch East India Company) – *டச்சு கிழக்கிந்திய நிறுவனம்.*
2. ARA: Algemeen Rijksavchief (National Archieves), The Hague, Netherlands – *நெதர்லாந்து நாட்டின் தேசிய ஆவண காப்பகம்.*
3. ANF: Archives Nationales de France Nationales de France (National Archieves), Paris, France – *பிரான்சு நாட்டின் தேசிய ஆவண காப்பகம்.*
4. OIOC: Oriental and India Office Collections, London, United Kingdom. – *இங்கிலாந்து நாட்டிலுள்ள கிழக்கத்திய மற்றும் இந்திய அலுவலகக் கோப்புகள்.*

## டச்சு, பிரெஞ்சு மற்றும் ஆங்கில அதிகாரிகளின் பெயர்கள் தமிழ் உச்சரிப்பில்...

1. Adolf Swarts - *அடால்ப் சுவார்ட்*
2. Andries Leslorant - *ஆன்டிரிசு லெசுலோரன்ட்*
3. Anquetil du Perron - *ஆன்சிலே டி பெரோன்*
4. Berger - *பெர்கர்*
5. Bertram - *பெர்ட்ரம்*
6. Carl August Duijvenschot - *காரல் ஆகத்து டியூவன்சாட்*
7. Charles Whitehill - *சார்லசு ஒயிட்கில்*
8. Corporal Daniel Emmert - *கார்ப்பரல் டேனியல் எம்மர்ட்*
9. De Heere - *டி கீரே*
10. De la Bourdonnais - *டி லா போர்டொனியா*
11. Dirois - *டிரோயிசு*
12. Dufuijt - *டுபூயித்*
13. Ezechiel Rabby - *எசக்கியல் ராபி*
14. Eustache de Lannoy - *எசுதாக்கி டி லெனாய்*
15. Fancois d'Haenens - *பிரான்சீசு டி'கேனின்*
16. Hackert - *காக்கர்ட்*
17. Hendrik van der Linden - *கென்டிரிக் வான் டெர் லின்டன்*
18. Hedrik Wendelin Koller - *கென்டிரிக் வென்டலின் கோலர்*
19. Jan Christoffel Hartman - *சான் கிறித்தோபால் கார்ட்மேன்*
20. Jan Dirk van der Bruggen - *சான் டிர்க் வான் டெர் புரூகன்*

*21.* Jan Theunisz - *சான் தியூனிசு*
*22.* Johan Christian Rijtel - *யோகான் கிறித்தியன் ரிசித்தல்*
*23.* Karel Hendrix - *காரல் கென்டிரிக்*
*24.* Lieutenant Willem Harmesz - *லெத்தேனந்த் வில்லியம் கார்மேசு*
*25.* Martin Sart - *மார்ட்டின் சார்ட்*
*26.* Maurits Bruininck - *மவுரித் புரூனிங்*
*27.* Moens - *மௌவன்*
*28.* Moreau - *மொரோ*
*29.* Reinicus Siersma - *ரெனிகியூசு சியர்சுமா*
*30.* Rosenvelt - *ரோசன்வெல்ட்*
*31.* Salvador Rodriguez - *சால்வடோர் ரோட்ரிகூசு*
*32.* Sergeant Hartman - *செர்சியன்ட் கார்ட்மேன்*
*33.* Silvester Mendes - *சில்வெத்தர் மென்டசு*
*34.* Stein van Gollenesse - *தைன் வான் கொல்லெனெசே*
*35.* Swarts - *சுவார்ட்*
*36.* Van Imhoff - *வான் இம்காப்*
*37.* Willem Lucasz - *வில்லியம் லூக்காசு*





**தைன் வான் கொல்லெனெசே** **மார்த்தாண்ட வர்மா**

## வெற்றித்தூணில் பதிக்கப்பட்டுள்ள நாள் சரியானதா?

குளச்சல் போரின் வெற்றியை நினைவுகூரும் வகையில், திருவிதாங்கூர் அரசால் குளச்சல் கடற்கரையில் வெற்றித்தூண் ஒன்று எழுப்பப்பட்டது. அத்தூணானது குளச்சல் போரின் 200–வது ஆண்டை நினைவுகூரும் வகையில் 1941–இல் நிறுவப்பட்டதாகும். இத்தகவலை, தமிழக அரசால் வெளியிடப்பட்டிருக்கிற கன்னியாகுமரி மாவட்ட தொல்லியல் கையேட்டில் காணலாம்.

குளச்சல் வெற்றித்தூணில் கீழ்க்கண்டவாறு ஆங்கிலத்தில் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. "THIS PILLAR COMMEMORATES THE VICTORY OF THE TRAVANCORE ARMY OVER THE DUTCH AT COLACHAL ON THE 31ST JULY 1741 A.D (15TH KARKADACAM 916 M.E).

1741 சூலை 31 அன்று, குளச்சல் போர் முடிவடைந்ததாக குறிப்பிடப்பட்டிருக்கும் இத்தகவலானது ஆங்கிலேயர்களின் அஞ்சுதெங்கு ஆவணங்களில் இருந்தே எடுத்து கையாளப்பட்டுள்ளது. (Letters to FSG, Vol. 26). ஆங்கிலேயர்களின் அஞ்சுதெங்கு கோட்டையின் தலைமை அதிகாரி சார்லசு ஒயிட்கில், சென்னை புனித சார்ச் கோட்டைக்கு அனுப்பியத் தகவலில் 1741 சூலை 31 அன்று குளச்சல் போர் நிறைவடைந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். இவரது கடிதங்கள் தமிழக அரசின் சென்னை ஆவணக் காப்பகத்தில் பத்திரப்படுத்தப்பட்டுள்ளன. டச்சுத் தரப்பு ஆவணங்களில் 1741 ஆகத்து 9 அன்று குளச்சலில் உள்ள டச்சுவின் ஆயுதக்கிடங்கு வெடித்துச் சிதறியவுடன் போர் முடிந்துவிட்டதாக கூறுகிறது. டச்சுவினர் கிரகோரியன் நாட்காட்டியையும், ஆங்கிலேயர்கள் சூலியன் நாட்காட்டியையும் பின்பற்றுவதால், இருதரப்பினருக்குமான தேதியில் பத்து நாட்கள் மாறுபடுகிறது.



உரோமாபுரி மன்னர் சூலியசு சீசரால் கி.மு. 46 ஆண்டு அறிமுகப்படுத்தப் பட்டதே சூலியன் நாட்காட்டி. கி.பி. 1582–இல், சூலியன் நாட் காட்டியில் சில மாற்றங்களை கத்தோலிக்கப் பாப்பரசர் கிரகோரி ஏற்படுத்தியதுடன், அப்புதிய நாட்காட்டியை மக்கள் மத்தியில் அறிமுகப்படுத்தினார். இது, கிரகோரியன் நாட்காட்டி என அழைக்கப்படுகிறது. இந் நாட்காட்டியை பெரும்பாலான ஐரோப்பியர்கள் ஏற்றுக் கொண்டனர். இதனை ஆங்கிலே யர்களின் பிரித்தானிய அரசு ஏற்றுக்கொள்ளவில்லை. இருப்பினும், 1752–இல் ஆங்கில அரசும் இதனை ஏற்றுக் கொண்டதன் மூலம் உலகம் முழுவதும் மேற்படி நாட்காட்டி நடைமுறைக்கு வந்தது. எனினும், 1752 ஆண்டுக்கு முந்தைய ஆங்கிலேய ஆவணங்கள் பதிவுசெய்த தேதிகளில் பத்து நாட்கள் வேறுபாடுகள் இருக்கும் என்பதனை வாசகர்கள் நினைவில் கொள்க!

Map 1. General map of Kerala







**மார்க் டி லெனாய்** **திருத்தமிழ்த்தேவனார்**



டி லெனாயை கைது செய்தவர் தேவசகாயம் பிள்ளை, அனந்தபத்மநாபன் நாடார், குமார உதய மார்த்தாண்டன் நாடார், பொன்பாண்டித் தேவர், மார்த்தாண்டவர்மா என பல நூல்கள் வெளிவந்து வாசகர்கள் மத்தியில் பெரும் குழப்பங்களை ஏற்படுத்திவிட்டன. அந்நூல்கள் அனைத்தும் சாதிய ஆர்வலர்களால் எழுதப்பட்டு இருந்தன. நெதர்லாந்து நாட்டைச் சார்ந்த வரலாற்றாளர் மார்க் டி லெனாய், ஆவணங்களின் அடிப்படையில், குளச்சல் போர் குறித்து எழுதிய ஆங்கிலக் கட்டுரைகளை திருத்தமிழ்த்தேவனார் தமிழில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார். 'குளச்சல் போர்' குறித்த தகவல்களை, ஆவண அடிப்படையில் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்களுக்கு இந்நூல் ஓர் வரப்பிரசாதம்.

-எம்.எல். மேரி